Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 364

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர், மஹாவித்வான்

# SRI RAMANUJAN

EDITOR:
Mahamahimopadhyaya
P. B. ANNANGARACHARYA, Kanchipuram-631503.

வருட சந்தா ரூ. 10 ஜீவித சந்தா ரூ. 25

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

10—9—1978.

ஸ்ரீரஸ்து

காளயுக்தி வருஷம் ஆனி மாதம் 28-ம் தேதி (12—7—'78) புதன்கிழமை

வங்கீபுரம் அ. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் குமாரன்

அட்வகேட் சிரஞ்ஜீவி : **ரங்கநாதனுக்கும்**

ஸ்ரீமான் திவாப்ரதீபம் ஸ்ரீ உ. வே. எஸ். ரங்கஸாமி அய்யங்கார் ஜேஷ்ட குமாரத்தி

சௌபாக்கியவதி : டாக்டர் **கீதாவுக்கும்**

திருப்பாதிரிப்புலியூர் (Cuddalore) ஆரிய வைசிய சங்க கல்யான மண்டபத்தில்

## விவாஹ சுப முஹூர்த்தம் நடந்தேறியது



சௌ : **சீதாலக்ஷ்மி**, சௌ : **கீதா**, சிரஞ்ஜீவி : **ரங்கநாதன், A. ஸ்ரீநிவாஸ அய்யங்**

**இந்த மாதா பிதாக்களும் வதூவரர்களும் ஸகல ஸம்பத்துக்களுடன் நீடூழி வாழ்க.—பத்ராதிபர்**

# ஸ்ரீ ராமாநுஜன்-364



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரிய ஸ்வாமி

| தொகுதி -31 | காளயுக்திஸு ஆவணிமீ<br>10—9—1978 | பகுதி—4 |
|---|---|---|


## அன்பர்களுக்கு அறிவிக்கின்றேன்.

அடியேனுக்கு அன்பர்கள் நாற்றிசையிலும் நிரம்பியுள்ளார்கள். நானறிந்த அன்பர்களைவிட நானறியாத அன்பர்களே அதிகமாயிருப்பார்களென்று நினைக்கிறேன். தமிழ் நாட்டில் மட்டுமன்று; நாற்றிசையிலும் என்றெழுதியுள்ளேன்.



நாடோறும் கிடைத்துவருங் கடிதங்களினுல் தமிழ் நாட்டிலும் நாமறியாத அன்பர்கள் ஆங்காங்கு உள்ளார்களென்று அறியலாகிறது. சென்ற வாரத்தில் மூன்று நான்கு நாள் சிறிது உபாதி கொண்டிருக்க நேர்ந்தது. *மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணனைத் தவிர மற்றையோரைப் பெரும்பாலும் அழைப்பதில்லை. என்னையுமறியாமல் கிடந்ததனுல் உற்ருருறவினர் சிகித்ஸைக்கு வழி தேடினுர்கள். அது உடனே எங்கும் பரவிற்று. கடிதங்கள் குவிந்தன. ஆப்தர்களும் குழுமினர். சிலவிடங்களுக்குக் கடித மூலமாகத் தெரிவித்ததையும், சிலர்க்கு நேரில் சொன்னதையும் இங்கு விஜ்ஞாபிக்கிறேன். ஆசார்யஹ்ருதய முடிவில் ஒரு சூர்ணை; (அதாவது) "உற்ருமையோடே உற்றேனுக்கா தொழிந்தது, நாடுதிருந்த. நச்சுப்பொய்கையாகாமைக்கு, ப்ரபந்தம் தலைக்கட்ட, வேர்சூடுவார்மண்பற்றுப் போலே யென்னுமவற்றிலும், இனியினி யென்று இருபதின்கால் கூப்பிடும் ஆர்த்தியதிகார பூர்த்திக்கென்னுமது முக்ய்யம்'' என்பதாம். இதன் கருத்துச் சுருக்கம் வருமாறு— (உற்ருமையோடே உற்றேனுக்கா தொழிந்தது.)—

* பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பு மிந்நின்ற நீர்மை யினியாமுருமை * என்று ஆழ்வார் பிரார்த்தித்த போதே * உற்றேனுகந்து பணிசெய்து உனபாதம் பெற்றேன் * என்னும்படி யருள்செய்யாமல் இவரை இந்நிலத்திலே வைத்திருந்தது (எதற்காக வென்னில்); (நாடுதிருந்த) தன்னுடைய ஸ்ருஷ்டி அவதாரம் முதலானவற்ருலும் திருந்தாத ஜகத்து இவருடைய உபதேசங்களாலே திருந்துகைக்காக; (நச்சுப்பொய்கை யாகாமைக்கு) ப்ரார்த்தித்தவுடனே மோக்ஷம் கொடுத்துவிட்டால் ப்ரபத்தியை விஷப்பொய்கையாக நினைத்துத் தன் பக்கலிலே ஒருவரும்வந்து ப்ரார்த்திக்கமாட்டார்களென்று நினைத்து அது அப்படி யாகாமைக்காக; (ப்ரபந்தம் தலைக்கட்ட) தானும் தன் விபூதியும் வாழும்படி இவரைக் கொண்டு கவிபாடுவிக்கத் தொடங்கின ப்ரபந்தம் முடிவதற்காக; (வேர்சூடுவார் மண்பற்றுப்போலே) குருவேர்சூடுமவர்கள் பரிமளத்தில் விருப்பத்தாலே மண்பற்றுக் கழற்ருதாப்போலே ஜ்ஞாநிகளைச் சரம சரீரத்தோடே வைத்து அநுபவிக்குமவனுகையாலே இவருடைய ஜ்ஞான ப்ரேம பரிமள மெல்லாம் தோற்றும்படியிருக்கிற திருமேனியில் தனக்குண்டான விருப்பத்தாலே; (என்னுமவற்றிலும்) என்றிப்படி சொல்லப்படும்ஹேதுக்களிற்காட்டிலும், (இனியினியென்று இருபதின் கால் கூப்பிடும் ஆர்த்தி அதிகார பூர்த்திக்கென்னுமது முக்க்யம்)—* இனியாமுருமை * என்று தொடங்கி * உன்னைப் பெற்று இனிப்போக்குவனே * என்னுமளவாக இருபதின் கால் இனியென்று செரல்லிக் கூப்பிடும்படியான ஆர்த்தி பரம்பரையை விளைத்துப் பரமபக்தியளவான அதிகார பூர்த்தியை விளைக்கைக்காகவே (பேறுபெறுவிக்கத் தாமதித்தது) என்று சொல்லுமிக்காரணமே முக்கியமானது. என்பதாம்.

இந்த ஆக்ஷேப ஸமாதானங்கள் ஆழ்வாரொருவர்க்குத் தகுமே யல்லது பூமி பாரங்களான நம்போல்வார்க்குத்தகாது. கர்மசேஷ முள்ளவரையில் நாம் இங்கே துவளவேண்டியதுதான். * இனியாமுருமை * யென்று நாம் பிரார்த்திப்பவர்களுமல்லோம். ஆனாலும் * உள்ளுவாருள்ளிற்றெல்லாமுடனிருந்து அறியுமவனான எம்பெருமான் [பேரருளாளன்] அடியேன் வெளியிடநினைத்த நூல்கள் நிச்சேஷமாக முடிவுபெருமலிருப்பதனால் அவற்றைத்தலைக்கட்டியே அடியேனைக் கொண்டு போகநினைத்திருக்கிருனென்றே எண்ணியுள்ளேன்.

இன்று தொடங்கிய ஒரு நூலாவது–நாலாயிர—திவ்யப்பிரபந்தங்கள் தமிழ் மொழியாயிருக்கச்செய்தேயும், அவற்றில் கலசியுள்ள வடசொற்கள் [ஸம்ஸ்க்ருத பதங்கள்] ஆயிரக்கணக்கில் தேறும்; அவற்றையெல்லா மெடுத்து விளக்கத் தொடங்கியுள்ளேன். தமிழ்ப் பிரபந்தங்களில் வரும் வட சொற்கள் – தத்ஸமம், தத்பவம் என இருவகைப்படும். நாராயணன், கேசவன், மாதவன், மதுசூதனன், தாமோதரன், பாலகன், பரிபவம், கமலபாதம், சரணாரவிந்தம்...... இத்தகைய சொற்கள் தத்ஸமமெனப்படும். விஷ்ணுவை விட்டு வென்பது, ஹ்ருஷீகேசனை இருடீகேசனென்பது,... இவைபோன்றவை தத்பவம் எனப்படும். ஸ்பஷ்டமாகத் தெரியக்கூடியவை சில; அங்ஙனம் தெரியமாட்டாதவை பல. கண்ணபிரானுடைய பாலலீலைகளில் சப்பாணி கொட்டுதல் என்பதொன்று; இதனைப் பெரியாழ்வாரும் திருமங்கை மன்னனும் தம்தம் பிரபந்தங்களில் அநுபவித்துள்ளார்கள். "பாணி நா

ஸஹ பாணி – ஸஹபாணி; அதுதான் சப்பாணி – என்று ஒருகால் ஒரு பெரியவரிடம் கூறினேன். அவர் வியந்து மகிழ்ந்தார். இப்படி நாலாயிரத்திலுமுள்ள வடமொழிவிகாரச் சொற்களை யெல்லாம் எடுத்து விவரிக்கத் தொடங்கியுள்ளேனின்று. திருப்பல்லாண்டு பன்னிரண்டு பாசுரங்களில் மட்டுமுள்ள இத்தகைய சொற்களை இங்கு ஆதர்சரூபேண (Sample) காட்டுகின்றேன், காண்மின்;—

1. (பல்லாண்டு.) கோடி, மணிவர்ண. – இவை தத்ஸம வடசொற்கள். தோள் – வடமொழியில் (தவர்க்க த்ருதீயமான தோ: என்னுஞ்சொல் புஜபாஹு பர்யாயம்; கூரத்தாழ்வான் ஸுந்தரபாஹுவை ஸுந்தரதோ: என்கிறார். பவபூதி மஹாகவி உத்தரராமசரிதத்தில் * வ்யாப்ருதைகைகதோஷ்ணோ:. –. * என்கிறார் ஆகவே; தோள் என்பது வடசொல் விகாரம்.

2. (அடியோமோடும்.) சோதி–ஜ்யோதிஸ். பாஞ்சசன்னியம்–பாஞ்சஜந்யம்.
3. (வாழாட்பட்டு.) இராக்கதர், இலங்கை.
4. (ஏடுநிலத்தில்.) மனம்–மநஸ். நகரம். நமோநாராயணாய. பத்தர்–பக்தர்.
5. (அண்டக்குலம்.) அண்டகுலம், அதிபதி, அசுரர், இராக்கதர், இருடீகேசன், நாமம்.
6. (எந்தைதந்தை.) ஓணம் – ச்ரோண, அந்தியம் - அந்த்யம். (ஸந்த்யா) அரி-ஹரி. உரு-ரூபம். அரியை-அரி: (பகைவன்).
7. (தீயில்.) சக்கரம், மாயம்–(மாயா.) வாணன்–பாண:; குருதி–ருதிரம்.
8. (நெய்யிடை) நியதம், அத்தாணிச்சேவகம் – ஆஸ்தாநஸேவகம்; குண்டலம், சாந்தம் (சந்தநம்) நாகம்.
9. (உடுத்து.) பீதகம். திசை–(திசா.) கருமம், நாகம்.
10. (எந்நாள்.) குடில்–குடீரம்; மதுரா, நாகம்.
11. (அல்வழக்கு) கோட்டி-கோஷ்டீ. அபிமாந துங்க:, நமோநாராயண.
12. (பல்லாண்டென்று). நாமம், பவித்ரன், பரமேஷ்டீ, சார்ங்கம். விஷ்ணுசித்த:, பரமாத்மா. ஆக இவை ஆதர்சமாகக் காட்டப்பட்டன.

இத்தகைய சில நூல்கள் எழுதத் தொடங்கியிருப்பவை
நிறைவேறப் பேரருளாளன் அருள்புரியவேணும்; அருள்புரிவன்.

---

## பத்ராதிப விஜ்ஞாபனம் P. B. A.

பேரன்புடைய பெருமக்களே!, சதாப்தி கடந்த பெரியார்களின் பெருமை வெளியீட்டை இன்னும் ஆறுமாதம் வரையிலாவது தொடர்ந்து நடத்திவரவேணுமென்னும் விருப்பமுடையோம். நாம் நேராகத் தெரிந்துகொண்ட பெரியார்களைப் பற்றியே எழுதவேணுமென்று இது தொடங்கினோம். அப்படிப்பட்ட மஹான்கள் இன்னமும் பலர் சேஷித்திருக்கிறார்கள்; அவர்கள் தவிர, கூப கூர்மஸதர்மாவான அடியேனறியாத மஹநீயர்களும் பலர் ஆங்காங்கு எழுந்தருளியிருந்தவர்களைப்

பற்றியும் வெளியிடவேணுமென்று பலர் விரும்புவதனுல் அன்னவர்களின் விருப்பத்தையும் பூர்த்தி செய்விக்கவேணுமென்கிற குதூஹலங் கொண்டு அடியேனுக்குப் பரிசிதர்கள் உள்ள விடங்களுக்குக் கடிதமெழுதப்பட்டுள்ளது. ப்ரக்ருதம் அச்சுத்தாள் கிடைப்பது அரிதாயிருப்பதனுலும், பல மஹான்களுக்கு ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவங்கள் திருமணங்கள் நடந்திருப்பதைப்பற்றி வெளியிட வேண்டியிருப்பதாலும் இவ்விதழில் அந்த வெளியீடு இடம்பெருமலிருக்கின்றது.*

---

## திவ்யப்ரபந்த பரீக்ஷை

திருவல்லிக்கேணியில் வாழும் ஸ்ரீமான் மேதாவிமணி M. A. வெங்கட கிருஷ்ணன், M. A., தனது மாளிகையில் திவ்யப்ரபந்த ப்ரவசன பாடசாலை யேற்படுத்தி ஏறக்குறைய ஐம்பது மாணுக்கர்களைக் கைங்கர்ய நிஷ்ணுதர்களாக ஆக்கிவருவது மிகவும் புகழத்தக்கது. மேன்மேலும் ஓங்கி வளரவேணுமென்று மங்களாசாஸனம் செய்யத்தக்கது. அந்த வித்யார்த்திகளில் இருவர் ஒரு விவாஹார்த்தமாகச் சென்ற வாரத்தில் இங்கு வந்திருந்தார்கள். ஸ்ரீமான் கண்ணனென்கிற வொருவனை நோக்கி நான் சொன்னதாவது—

"கண்ணு! உன்னை நான் இன்று பன்னிரு பாட்டு கேட்க;
நீ ஒன்றுகூட சொல்லவில்லையன்ரு?"

என்றேன். அதற்கு அவன் "தேவரீர் ஒன்றும் கேட்கவில்லையே! அடியேன் எப்படிச் சொல்வது? என்ருன். கூட வந்திருந்த மற்றெருரு மாணுக்கன் "ஸ்வாமிந்! அடியேன் விண்ணப்பம் செய்கிறேன்" என்று தொடங்கி நான் கேட்ட பாசுரங்களையெல்லாம் அடைவே சொல்லிவிட்டான். எங்ஙனே யென்னில்;

(கண்ணு!) * கண்ணு! நான்முகனைப் படைத்தானே * (பெரியாழ்வார்)
(உன்னை) * உன்னையுமொக்கலையில் கொண்டு * ஷை
(நான்) * நான் கூறுங் கூற்ருவதித்தனையே * (பெரிய திருவந்தாதி)
(இன்று) * இன்று வந்தித்தனையும் * (நாச்சியார் திருமொழி)
(பன்னிரு) * பன்னிருதிங்கள் * (பெரியாழ்வார்)
(பாட்டு) * பாட்டு முறையும் * (நான்முகன் திருவந்தாதி)
(கேட்க) * கேட்க யானுற்றதுண்டு * (திருக்குறுந்தாண்டகம்)
(நீ) * நீயுந்திருமகளும் நின்ருயால் * (முதல் திருவந்தாதி)
(ஒன்று) * ஒன்றுண்டு செங்கண்மால் * (பெரிய திருவந்தாதி)
(கூட) * கூடச் சென்றேனினியென் * (திருவாய்மொழி)
(சொல்ல) * சொல்லமாட்டேனடியேன் * (ஷை)
(இல்லை) * இல்லையல்லல் எனக்கேலினி * (ஷை)
(அன்ரு) * அன்ருயர் குலக்கொடியோடு * (பெரிய திருமொழி)

என்று பன்னிரண்டு பாசுரங்களுக்கு மேலாகவும் சொல்லித் தலைக்கட்டினான். அதன் பிறகு, கண்ணனென்கிற மாணாக்கன் "ஸ்வாமி! தேவரீருடைய பரீக்ஷையின் திறத்தை அடியேன் இப்போதுதான் தெரிந்து கொண்டேன்; இன்னமும் கடினமாகப் பரீக்ஷித்தாலும் பரீக்ஷிக்கலாம், விண்ணப்பம் செய்கிறேன்' என்றான்.

" அமரம் காவியம் மாகம் சம்பு நாடகம் அலங்காரம் தற்கம் வேதம் வேதாந்தம் புராணம் பாரதம் ராமாயணம் திருவாய்மொழி எல்லாம் சொல்லுவாயோ?" என்றேன். இந்த வினாவாக்கியத்தை யெழுதிக் கையில் வைத்துக்கொண்டு உடனேசொன்னான்.

(அமரம்) * அமரவோரங்கமாறும் * (திருமாலை)
(காவியம்) * காவியங்கண்ணி யெண்ணில் * (பெரிய திருமொழி)
(மாகம்) * மாகமாநிலம் முழுதும் வந்திறைஞ்சும் * ஷை
(சம்பு) * செறிதவச் சம்பு.... * (பெருமாள் திருமொழி)
(நாடகம்) * நாடகஞ் செய்கின்றனவே * (திருவாய்மொழி)
(அலங்காரம்) * அலங்காரத்தால் வருமாயப்பிள்ளை * (பெரியாழ்வார்)
(தற்கம்) * தற்கச்சமணரும் * (இராமானுச நூற்றந்தாதி)
(வேதம்) * வேதம் வல்லார்களைக் கொண்டு * (திருவாய்மொழி)
(வேதாந்தம்) * வேதாந்த விழுப்பொருளின் * (பெரியாழ்வார்)
(புராணம்) " இலிங்கத்திட்ட புராணத்தீரும் * (திருவாய்மொழி)
(பாரதம்) * பன்னியுரைக்குங்கால் பாரதமாம் * (பெரிய திருமடல்)
(ராமாயணம்) * படிகொண்ட கீர்த்திராமாயண மென்னும் * (இராமானுச)
(திருவாய்மொழி) * திருவாய்மொழியின் மணந்தருமின்னிசை * ஷை
(எல்லாம்) * மற்றையமரருமெல்லாம் * (திருவாய்மொழி)
(சொல்லு) * சொல்லுவன் சொற்பொருள் * (பெரிய திருமொழி)
(வாயோ) * வாயோரீரைஞ்ஞூறு துதங்கள் * (பெருமாள் திருமொழி)

— திவ்யப்ரபந்த பரீக்ஷை முற்றுப்பெற்றது —

## திவ்யப்ரபந்தஸாரம்.

இந்தமகுடத்தின் பொருள் இரண்டு வகையாம் ;-

1. திவ்யப்ரபந்தங்களெல்லாவற்றுக்கும் ஸாரமான பொருள்.
2. திவ்யப்ரபந்தங்களுக்குள் திருவாய்மொழியே ஸாரம் என்பது.

—அடைவே இரண்டையும் நிரூபிக்கின்றேன்—

(1) தத்வஹித புருஷார்த்தங்களை ஸம்சய விபர்யயமின்றிக்கே தெரிவிக்குமவை திவ்யப்ரபந்தங்களேயாம். [தத்வம்-ஹிதம்-புருஷார்த்தம்] பரதத்வமின்னதென்று நிஷ்கர்ஷித்துத் தெரிவிப்பது, பகவத்ப்ராப்திஸாதனம் இன்னதென்று நிர்ணயித்து வெளியிடுவது, கடைசியாகப் பெற்றுக் களிப்பதற்கு உறுப்பான பேறு

இன்ன தென்று நிச்சயித்துத் தருதல்—ஆகிய மூன்றுதான் சாஸ்த்ரங்களுக்கு முக்யமான க்ருத்யமாகும். வேதாந்த சாஸ்த்ரங்களில் தலையான [ப்ரஹ்மஸூத்ர மென்கிற] சாரீரகமீமாம்ஸையானது ப்ரஹ்மம் பரப்ரஹ்மம் என்று ஸாமாந்ய சப்தத்தாலே பரதத்வத்தைச் சொல்லிக்கொண்டு போகிறதேயொழிய ஓரிடத்திலும் நாராயணனென்று நிர்தேசிக்கவில்லை. பல உபபத்திகளைக் கொண்டு ப்ரஹ்ம சப்தவாச்யன் நாராயணனே யென்று நாம் அறுதியிட முடிந்தாலும் அந்த சாஸ்த்ரம்தானே கையிலங்கு நெல்லிக்கனியாக ஸ்பஷ்டோக்தியாலே காட்டித் தரவில்லை யென்பது குறையே யன்றோ? ஆழ்வார்கள் இக்குறைக்கு இடமில்லாதபடி ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவமென்று ஐயந்திரிபற அறுதியிட்டருளினார்கள். *பொல்லாத தேவரைந் தேவரல்லாரைத் திருவில்லாத் தேவரைத் தேறேன்மின் தேவு* என்பது முதலான பாசுரங்களை இங்கே பரக்கவுபந்யஸிப்பது. இனி உபாயஸ்வரூபத்தில் வந்தாலோ ப்ரபத்தியொழிய மற்றொன்று தஞ்சமன்று என்று நம் ஆசார்யர்கள் திடமாகக் கொண்டிருப்பதற்கு மூலம் திவ்யப்ரபந்தங்களேயல்லது வேறெந்த சாஸ்த்ரமுமன்று, இனி புருஷார்த்த ஸ்வரூப நிர்ணயம் அருளிச்செயல் தவிர மற்றெந்த சாஸ்த்ரத்திற்கும் நிலமன்று; *கதாஹமைகாந்திக நித்ய கிங்கர:* என்று ஆளவந்தாரும், *நித்ய கைங்கர்ய ப்ராப்த்யபேக்ஷயா * நித்ய கிங்கரோ பவாநி * இத்யாதிகளை அஸக்ருத் அருளிச்செய்யும் எம்பெருமானாரும் கைங்கர்யமே பரமபுருஷார்த்தமென்று கொணடது *அடிமை செய்யவேண்டு நாம்* *குற்றேவ லெங்களைக் கொள்ளாமற்போகாது* என்றிவை முதலான அருளிச்செயல்களைக் கொண்டேயன்றோ. ஆக, தத்வஹித புருஷார்த்தங்களில் நிஷ்கல்மஷமான வைசத்யத்தை விளைப்பதே திவ்யப்ரபந்த ஸாரம் என்று முதல் யோஜனையின் நிர்வாஹம் காண்க.

(2) திவ்யப்ரபந்தங்களுக்குள்ளே திருவாய்மொழிதான் ஸாரம். என்கிற த்விதீய யோஜனையைப் பிடித்து இனி விஜ்ஞாபிக்கிறேன். ஆழ்வார் எம்பெருமானைத் திருவாய்மொழி முகத்தாலநுபவித்த அநுபவம் உலகத்தில் காணும் வாங்மயங்களில் எதிலுங் காணமுடியாதது. *பக்திப்ரபாவபவதத்புத பாவபந்தஸந்துக்ஷித ப்ரணயஸார ரஸௌகபூர்ண:* என்று கூரத்தாழ்வானருளிச்செய்தபடி, பக்தி பரீவாஹ ரூபங்களான அத்புதாநுபவங்கள் காணலாவது திருவாய்மொழியிலே தான். 1. இளைய பெருமாள், 2. பரதாழ்வான், 3. சத்ருக்னாழ்வான், 4. சக்ரவர்த்தி, 5. யசோதை, 6. ப்ரஹ்லாதாழ்வான், 7. விபீஷணாழ்வான், 8. திருவடி, 9. அர்ஜுனன் முதலானார்படிகளை ஆழ்வார் பக்கலிலே ஸ்ரீஸூக்திமுகேந காணலாம். (இளையபெருமாள்.) *பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்தராயிந்தார் இவர்; ஆழ்வாரும்* அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு பெற்றவர். *பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே, அஹம் ஸர்வம் கரிஷ்யாமி* என்று பர்வதஸாநுக்களிலே ஸகல கைங்கர்யங்களும் செய்யப் பாரித்தவர் அவர்; இவரும் *திருவேங்கடத்தெழில் கொள் சோதி யெந்தை தந்தை தந்தைக்கு ஒழிவில் காலமெல்லா முடனாய்மன்னி வழுவிலா வடிமை செய்யப் பாரித்தார். *ப்ராதா பர்த்தா ச பந்துச் ச பிதா ச மம ராகவ:* என்று பெருமாளையே ஸகலவித பந்துவுமாகக்

கொண்டவர் அவர்; இவரும் *சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்களும் மேலாத்தாய் தந்தையுமவரேயினி யாவாரே யென்றிருந்தவர். (2) பரதாழ்வான்) கைகேயியை சத்ருவாக நினைத்து *ஹந்யாமஹமிமாம் பாபாம் கைகேயீம் துஷ்ட சாரிணீம்* என்று சீறி உபேக்ஷித்தார் அவர். ஆழ்வாரும் பகவத் விஷயத்தில் தாம் பதறுவதை ஸஹியாமல் விலக்கும் மாதாவை சத்ருபக்ஷமாக்கி *அன்னை என்செய்யிலென்?* என்றும், *உங்களோடெங்களிடையில்லையே* என்றும் உபேக்ஷித்தார். அவர் *ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய* என்றிருந்தாப்போலே இவர்தாமும் *யானே நீ யென்னுடைமையும் நீயே* என்றிருந்தார். வஸிஷடாதி புரோஹிதர் நீ ராஜாவாகவேணுமென்று நியமித்தவிடத்தும் மஹத்தான ஐச்வர்யத்தையும் த்ருணமாக நினைத்தாரவர்; இவரும் *கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ் செல்வம் நெருப்பு* என்று திக்கரித்தார். அவர் பெருமாளுக்காக சித்ரகூட மலைக்குச் சென்றாப்போலே இவரும் *வேங்கடவாணனை வேண்டிச் சென்றே* என்று திருமலையப்பனை யதாமநோரதம் அநுபவிக்கைக்குச் சென்றார், அவர் *ஸ காமமநவாப்யைவ* என்று தன் மநோரதம் நிறைவேறப் பெறாதிருந்தார்; இவரும் *காமுற்ற கையறவோடு* என்னும்படி தாம் காமுற்றது கைபெறாமல் வருந்தியிருந்தார். அவர் திருவடிநிலையைப் பெற்றார். இவரும் *திருவடியே சுமந்துழலக் கூட்டரிய திருவடிக்கண் கூட்டினை நான் கண்டேனே* என்னப்பெற்றார். அவர் ''பங்கதிக்தஸ் து ஜடிலோ பரத:'' என்னும்படி கண்ணீராலுண்டான சேற்றிலே தரைக் கிடைகிடந்தார்; இவரும் "கங்குலும் பகலுங் கண்டுயிலறியாள் கண்ணநீர் கைகளாலிறைக்கும்'' என்கிறபடியே கண்ணீர் வெள்ளச் சேறு தோயவிருந்தார். அவர் மூத்தாரிருக்க இளையார் முடிசூடக் கடவரல்ல ரென்கிற குலமரியாதை தப்பாமே தொண்டு பூண்டிருந்தார்; இவரும் 'குடிக்கிடந்து ஆக்கம் செய்து நின் தீர்த்தவடிமைக் குற்றேவல் செய்து பொன்னடிக்கடவாதே வழிவருகின்ற வடியராகத் தம்மை யநுஸந்தித்தார்.

(3. சத்ருக்நாழ்வான்) '' கச்சதா மாதுலகுலம் பரதேந '' இத்யாதிப்படியே பாகவத சேஷத்வமே பரமபுருஷார்த்தமென்று பரதாழ்வானுக்கே சேஷபூதராய் அவருடைய பாவநத்வ போக்யத்வங்களிலே கால்தாழ்ந்து ''பும்ஸாம்த்ருஷ்டி சித்தாபஹாரியான பெருமாளுடைய வடிவழகிலும் துவக்குண்ணாதே பரதாநுவ்ருத்தியே பணியாயிருக்கச் செய்தேயும், பரதாழ்வானுக்கு உகப்பென்ற ஆகாரத்தாலே பெருமாளுடைய வடிவிலும் நெஞ்சுசென்று ''நாஹம் ஸ்வபிமி ஜாகர்மி தமேவார்யம் விசிந்தயந்'' என்றார் அவர். இவரும் ''நெடுமாற்கடிமையிலே பாகவத சேஷத்வநிஷடராயிருந்தும் அந்தப் பதிகத்திலேயே ''புலன்கொள்வடிவு என் மனத்ததாய்'' என்னும்படி யிருந்தார். (4. தசரதசக்ரவர்த்தி.) ''ந ததர்ப்ப ஸமாயாந்தம் பச்யமாநோ 'நராதிப:' என்று பெருமாளை வைத்தகண் வாங்காதே யநுபவியாநிற்கச் செய்தேயும் த்ருப்திபெறாதேயிருந்தான் சக்ரவர்த்தி; இவரும் ''எப்பொழுதும் நாள்திங்களாண்டூழி யூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழுது என்னாரவமுதமே" என்று திருப்தி பெறாமலே யநுபவித்தார். (5. (யசோதைப்பிராட்டி) கண்ணபிரான் ''யமலார்ஜுநயோர் மத்யே ஜகாம கமலேக்ஷண:'' என்று, மருள மருள விழித்துக்கொண்டு இரட்டை மருதமரங்களினிடையே தவழ்ந்து சென்ற

போது கண்டு வயிறு எரிகொளுந்தி முகத்தைப் பார்த்து இப்பெரிய மருதுகளின்
நடுவே போனாயே! என்று நொந்தாள் யசோதை. இவரும் அதீதகாலிகங்களும்
ஸமகாலிகமாக ப்ரகாசிக்கப் பெறுகையாலே "போனாய் மாமருதின் நடுவே யென்
பொல்லாமணியே'' என்று அவள் பாவனையிலே பேசினார். (6. ப்ரஹ்லாதாழ்வான்)
"நாக்நிர் தஹதி நைவாயம் சஸ்த்ரைச் சிந்நோ மஹோரகை:'' இத்யாதியாக ஸ்ரீ
விஷ்ணுபுராணத்தில் (11-9-69) சொன்னபடியே நெருப்பு முதலானவை பாதக
மாகாதபடி விளங்கினான் ப்ரஹ்லாதன்; "மண்ணையிருந்து துழாவியில்'' அறியும்
செந்தீயைத் தழுவி அச்சுதனென்னும் மெய்வேவாள்'' போமிளகாகத்தின் பின்
போய் அவன் கிடக்கை யீதென்னும்''' என்னும்படி யிருந்தார் அவன் "எங்குமுள
னென்று பிரதிஜ்ஞைபண்ணினதுபோல இவரும் "பரந்த தண்பரவையுள் நீர்
தொறும் பரந்துளன்' ஏண்பாலுஞ் சோரான் பரந்துளனு மெங்குமே" என்றார்.
(7. விபீஷணாழ்வான்) "த்யக்த்வா புத்ராம்ச்ச தாராம்ச்ச "பரித்யக்தா மயா லங்கா"
இத்யாதிப்படியே எல்லாவற்றையும் விட்டுப் பெருமாளையே தனக்குஎல்லாமுமாகப்
பற்றினவன். இவரும் "பாதமடைவதன் பாசத்தாலே மற்ற வன்பாசங்கள்
முற்றவிட்டுத் "தயாதற்கு மகன் தன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே யென்
றிருந்தார். (8. திருவடி) "ஸ்நேஹோ மே பரமோ ராஜந்......பாவோ நாந்யத்ர
கச்சதி' "ஸ்தோத்ரைவ ஹந்த ஹநுமாந் பரமாம் விமுக்திம் புத்த்யா அவதூய சரிதம்
தவ ஸேவதேஸௌ'' (அதிமாநுஷஸ்தவே.) என்றும் சொல்லுகிறபடியே பரத்வத்
தின் பேர் சொல்லுகையும் அஸஹ்யமாய் (அந்யத்ர பாவோ ந கச்சதி) என்று
சொல்லி ஸ்ரீராமகுணாநுபவமே போதுபோக்காயிருந்தார் திருவடி. இவரும்
"சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத்தன்மை தேவபிரானறியும்'' என்று பரம
பதத்தை மற்றொன்றாகப் பேசி "கணைநாணிலோவாத் ப்தாழில் சார்ங்கன் தொல்
சீரை ஓவாதவூணாகவுண்பவராய் " கற்பாரிராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ''
என்றிருந்தார். (9. அர்ஜுநன்.) 'பச்யாமி தேவாந் தவ தேவ! தேஹே...'' என்று
விச்வரூபங்கண்ட பிறகு அதில் வெறுப்புக்கொண்டு "கிரீடிநம் கதிநம் சக்ரஹஸ்த
மிச்சாமி த்வாம்'' என்று திவ்யாயுதங்களேந்தின ரமணீய ரூபத்தைக்காண விரும்
பினான் அர்ஜுநன். இவரும் "நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்
சீரார் சுடர்களிரண்டாய்ச் சிவனாயயனானாய்'' என்று எம்பெருமான் விச்வரூபனா
யிருக்கிறபடியைக் கண்டும் அதில் அத்ருப்தராய் "கூராராழி வெண்சங்கேந்தி
வாராய்'' என்று அஸாதாரண விக்ரஹாநுபவ குதூஹலத்தைக் காட்டினார். *
இங்ஙனே மற்றும் பல அநுபவங்களைக் கண்டுகொள்க. ... ....

ஸ்ரீ ரஸ்து
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# உபந்யாஸக ஸௌபாக்ய மாலை

*ஸ்ரீ காஞ்சீ மஹாவித்வான்:* **P. B. அண்ணங்கராசாரியர் சுவாமி.**

## துலாபாரகதோபந்யாஸம்

—*—

இதிஹாஸபுராணங்களில் நாளடைவில் அனேக ப்ரக்ஷேப உத்க்ஷேபங்கள் நேர்ந்துவிட்டன வென்பதை அடியேன் பல நூல்களில் விவரித்திருக்கிறேன். ப்ராமாணிகர்கள் அச்சிட்டிருக்கும் ஸ்ரீ ராமாயணபாரதாதிகளில் ஆங்காங்கு "ப்ரக்ஷிப்தஸ் ஸர்க்க:-ப்ரக்ஷிப்தோத்யாய:" என்று மகுடம் கொடுத்திருப்பதைக் காணுநின்றோம். அத்யாய ஸர்க்கங்கள் கிடக்க; ச்லோகங்களும் உருமாறிப் போனவை பல; இடம் மாறிச் சென்றவை பல; அறவே எடுபட்டுப் போனவை பல; புதிதாகவே வந்து புகுந்தவை பல. இப்படிப்பட்ட ஆபத்துக்கள் நம்முடைய ப்ராசீன நூல்களுக்கு நேர்ந்திருப்பதை அடியேன் விரிவுக்கு அஞ்சாமல் பல ப்ரகரணங்களில் உபபாதித்திருக்கிறேன். இதிஹாஸ புராணங்களில் அடியோடு இடம்பெறாத கதைகள் ஹரிகதாகாலக்ஷேபகாரர்களிடத்திலும் ஸினிமாமேடைகளிலும் வெற்றிபெற்று விளங்குவதாகப் பல பெரியோர்கள் கூறுகின்றனர்; அத்தகைய கதைகளுக்கு மஹான்கள் இடமளிப்பது சோசநீயம். மத்ஸ்ய புராணத்தில் 185, 186 ஆம் அத்யாயங்களில் துலாபாரதானத்தின் ப்ரசம்ஸையுள்ளது. திருவேங்கடமுடையான் ஸந்நிதியில் ப்ரார்த்தனையினாலாகும் பலவகை ஸமர்ப்பணைகளில் துலாபார ஸமர்ப்பணையும் ஒன்றாக நடந்துவருகின்றது. ஸ்ரீ காஞ்சியிலும் தேவப்பெருமாள் ஸன்னிதியில் திருமுற்றவெளியில் ஒரு சிறிய நாற்கால் மண்டபமுள்ளது; அதற்குத் துலாபார மண்டபமென்று பெயர் வழங்கிவருகின்றது. முற்காலத்தில் துலாபார ஸமர்ப்பணை இங்கும் நடந்து வந்ததாகச் சொல்லுகிறார்கள். ஸ்ரீ க்ருஷ்ண சரித்திரத்தில் ஆகரம் தெரியாத ஒரு துலாபார கதை சொல்லப்பட்டு வருகின்றது. இது பலவிதமாகச் சொல்லப்பட்டு வருவதாயிருந்தாலும் அடியேனறிந்த வொருவிதத்தை விஜ்ஞாபிக்கிறேனிங்கு.

நாரதமாமுனிவர் தேவலோகத்திலிருந்து அடிக்கடி கண்ணபிரானை ஸேவிக்க வருவர். ஒரு ஸமயம் வரும்போது அங்கிருந்து பாரிஜாத புஷ்பமொன்றைக் கையில் கொணர்ந்தார். "ருக்மிணீ ஸத்யபாமாப்யாம் நித்யயுக்தாய மங்களம்" என்கிறபடியே ருக்மிணீஸத்யபாமைகளுடன் கூடிக் குலாவிக் கொண்டிருக்கும் கண்ணபிரானை ஸேவித்து அந்த புஷ்பத்தைப் பெருமானிடம் கொடுத்தார். அதைப் பெருமான் சற்று அநுபவித்துவிட்டு அருகிலிருந்த ருக்மிணிப் பிராட்டி கையில் கொடுக்க, ருக்மிணிக்கு மிகவுகப்பு உண்டாயிற்று. ஸத்யபாமையின் மனம் விகாரமடையத் தொடங்கிற்று. ஏற்கெனவே கண்ணபிரானுக்கு ருக்மிணியிடத்தில்தான் மிகுந்த காதலென்றும் தன்னிடத்தில் குறைந்த காதல்தானென்றும் நினைத்துக் குறையுற்றிருந்தவள் ஸத்யபாமை. ப்ரக்ருதம் பாரிஜாத புஷ்பத்தைத் தனக்குக்கொடாமல் ருக்மிணிக்குக் கொடுத்ததனால் அவளுடைய மனத்தில் மறம் விஞ்சியது. இந்த கிலேசத்திற்கு எப்படி நிவ்ருத்தியென்று பல பெரியோர்களையுங் கேட்டுக் கொண்டிருந்தாள் ஸத்யபாமை. உண்மையில் ருக்மிணியின் பதிபக்தி ஒப்புயர்வின்றிக் கனத்ததாகையாலே அது காரணமாகத்தான் அவளிடத்தில் கண்ணனுக்குக் காதலதிகம் என்று தத்வவித்துக்கள் உணர்ந்திருந்தார்கள். தனக்குத்தான் பதிபக்தி அதிகமென்று ஸத்யபாமையும் தன் மனத்தில் நினைத்திருந்தாள்.

இப்படியிருக்கையில் கண்ணனுக்குத் தன்மீது நிகரற்ற காதல் உண்டாக வேணுமென்று ஸத்யபாமை பல விரதங்களை யனுட்டித்து வந்தாள். நாடோறும் விசேஷமான அதிதிபூஜைகள் பண்ணுவதும் கேட்டார் கேட்டபடியே தானஞ்செய்வதுமாயிருந்தாள். இச்செய்தி நாரத முனிவர்க்கு எட்டியது. அவரோ ருக்மிணீ பக்ஷபாதிகளிலொருவர். பதிபக்தியில் சிறந்தவள் ருக்மிணிப் பிராட்டிதானென்பது அவருடைய ஸித்தாந்தம். அதை உலகறியச் செய்வதற்கு இதுதான் நல்ல ஸமயமென்று தோன்றிற்று அவர்க்கு, ஸத்யபாமை கேட்டார்கேட்டதெல்லாம் தானம் பண்ணுவதென்று விரதங்கொண்டு அப்படியே செய்துகொண்டிருக்கிறளென்று (நாரதர்) செவியுற்றிருந்தபடியாலே ஒரு ப்ராஹ்மணவேஷம் பூண்டு நிலவுலகில் வந்து ஸத்யபாமையிடம் யாசகராய்ச் சென்று 'அது வேணும் இது வேணும்' என்று அபேக்ஷிக்குமடைவிலே கண்ணனையும் தானம் செய்யுமாறு கேட்டார். 'அப்படியே கொள்ளும்' என்று இசைந்து கொடுத்துவிட்டாள். கண்ணனும் க்ரய விக்ரய தானவிநிமயாதிகளுக்கு யோக்யனுய்த் தன்னையமைத்திருந்த பாரதந்த்ரியத்தாலே தன்னை ப்ரதிக்ரஹங்கொண்ட நாரதர் பின்னே போகத்தொடங்கினன். அவனுடைய விச்லேஷத்தைப் பொருத ஸத்யபாமை ஹாஹாகாரம் பண்ணத் தொடங்கினள். நாரதரோடு சிறிதுபோது வாக்வாதம் நிகழ்ந்தது. கடைசியாக ஒரு முடிவு சொன்னர் முனிவர்; துலாக்கோலொன்று நாட்டி அதில் ஒரு தட்டில் கண்ணனை வைப்பது; மற்றொரு தட்டில் ஸுவர்ணுதிச்ரேஷ்ட வஸ்துக்களை வைப்பது; எடை ஸமமானவளவில் அந்த வஸ்துக்களைப் பெற்றுக்கொண்டு கண்ணனைத் திருப்பிக் கொடுத்து விடுவதாக. இது கேட்டு ஸத்யபாமை மிகவுகந்து அப்படியேயென்றிசைந்து விலையுயர்ந்த நவரத்ன பூஷணுதிகளான கனத்த வஸ்துக்கள் பலவற்றையும் நிச்சேஷமாக ஒரு தட்டில்வைத்திட்டாள். கண்ணன் ஒரு தட்டில் அமர்ந்திருக்கின்றர். அந்தத் தட்டு தாழ்ந்தேயிருந்தது. ஸத்யபாமையின் தட்டு உயரவேயிருந்தது. இவ்வதிசயத்தைக்காண உலகமெல்லாம் திரண்டது. ருக்மிணிப்பிராட்டியும் வந்து வேடிக்கை பார்க்கிறள். நாரதர் கண்ணனைக் கொண்டுபோக வேண்டியதாக நேர்ந்துவிட்டது அது ருக்மிணிக்கும் அநிஷ்டமாகையாலே அவளுக்கு ஓர் உபாயம் தோன்றிற்று. உடனே தனது பூஜாபவனத்திற்குச் சென்றோடி நாடோறும் தான் கண்ணனுடைய பாதாரவிந்தத்தில் அர்ச்சிக்கிற திருத்துழாய்தளங்களின் குவியலில்நின்றும் ஒரு தளத்தைக் கொணர்ந்து ஸத்யபாமையின் தட்டில் அவள் வைத்திருந்த ஸகல வஸ்துக்களையும் அப்புறப்படுத்தி அந்தத் திருத்துழாய்த் தளத்தை வைத்திட இருதட்டும் ஸமநிலைக்கு வந்துவிட்டது. திருத்துழாய்த்தட்டு தாழ்ந்துமிருந்தது. அப்போது ருக்மிணியின் பதிபக்திக்கு அனைவரும் வியந்தனர். அதுநிற்க, ஸத்யபாமை தான் அனுஷ்டித்த விரதத்தின் பலனுகக் கண்ணனுடைய அன்பை அபரிமிதமாகப் பெற்றனள். அப்போது ஒருநாள் கண்ணனை நோக்கி 'அன்று நாரதர் கொணர்ந்து கொடுத்த பாரிஜாத புஷ்பத்தை எனக்குக் கொடுக்க மனமில்லாமல் போயிற்றேயுமக்கு!' என்று மிக்க மனக்குறை காட்டிப்பேச, அதற்குக்கண்ணன் 'ஸத்யே! குறையுருதே, ருக்மிணிக்கு ஒரு புஷ்பமன்றோ கொடுத்தேன்; கல்பவிருக்ஷத்தையே கொணர்ந்து உன்முற்றத்தில நட்டுவிடுகிறேன் பார், என்று சொல்லி, நரகாஸுரன் செருக்கையடக்கும் வியாஜமாக ஸத்யபாமையோடு கருடாரூடனுகச் சென்று அவனைக் கொலைக்கிட்டு இந்திரனிடம் வந்தபோது* என்னுதன்தேவிக்கு அன்று இன்பப்பூவீயாதாள்தன்னுதன் காணவே தண்பூமரத்தினை, வன்னுதப்புள்ளால் வலியப் பறித்திட்ட என்னுதன்* என்று பெரியாழ்வாரும், *மட்டேறு கற்பகத்தை மாதர்க்காய் வண்துவரை நட்டான்* என்று திருமங்கையாழ்வாருமருளிச் செய்தபடியே அவ்விடத்துக் கற்பகத் தருவையே பெயர்த்துப் பெரியதிருவடியின் தோளில் வைத்து த்வாரகைக்குக் கொணர்ந்து ஸத்யபாமையின் முற்றத்தில் ஸ்தாபித்தாயிற்று. அந்த வ்ருக்ஷம் ஆகாசப் பரப்பெங்கு மோங்கி வளர்ந்தபடியாலே பூக்கள் பூத்துவிழுவதெல்லாம் ருக்மிணிப் பிராட்டியின் முற்றத்திலேயாகும். இதிலிருந்து வேறொரு கதை.

துலாபாரகதோபந்யாஸம் முற்றிற்று.

—*—

# ருக்மிணீ கல்யாணோபந்யாஸம்.

—*—

ஸம்ஸாரிகளான நாம் சாஸ்த்ரோக்தங்களான பல ஸம்ஸ்காரங்களினிடையே விவாஹமொன்று செய்துகொள்ளுகிறோம். "இமாம் கந்யாம் தர்மப்ரஜார்த்தம் வ்ருணீமஹே" என்று சொல்லிக் கந்யகையை வரிக்கிறோம். எம்பெருமான் ப்ரஜார்த்தமாகப் பாணிக்ரஹணம் செய்துகொள்ள வேண்டியதில்லை; ஜநகசக்ரவர்த்தி ஸீதா பிராட்டியைப் பெருமாளுக்குக் கந்யகாப்ரதானம் பண்ணும்போது "ஸஹதர்மசரீ தவ" என்று சொல்லியிருக்கக் காண்கையாலே 'தர்மப்ரஜார்த்தம்' என்ற இரண்டில் தர்மார்த்தமான விவாஹமே விபவாவதாரங்களில் எம்பெருமான் உகந்தருளினதென்று உணர்க. அந்த தர்மம் எதுவென்றால், *விதிதஸ் ஸஹி தர்மஜ்ஞச் சரணாகதவத்ஸல:* என்ற ஸீதாபிராட்டியின் திருவாக்கிலே நோக்காக *ஸர்வாவஸ்த ஸக்ருத்ப்ரபந்நஜநதா ஸம்ரக்ஷணைகவ்ரதீ தர்மோ விக்ரஹவாந்* என்று [தசாவதாரஸ்தோத்ரே] ஸ்வாமியருளிச் செய்தபடி சரணாகத பரித்ராணந்தான் தர்மமென்று தேறுகின்றது. *ஸஹதர்மசரீம் சௌரேஸ் ஸம்மந்த்ரிதஜகத்திதாம், அநுக்ரஹமயீம் வந்தேநித்யமஜ்ஞாத நிக்ரஹாம் என்னப் பெற்ற பிராட்டியின் ஸஹயோகமில்லாமல் இந்த தர்மம் நிறைவேறாது. *லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யா காருண்யரூபயா, ரக்ஷக:* இத்யாதி ப்ரமாண ப்ரஸித்தியுமுள்ளது. அந்த ஸ்ரீ மஹாலக்ஷ்மி எம்பெருமானுடைய அவதாரங்கள்தோறும் தானும் வெவ்வேறு திருநாமங்கள் பெற்று அவதரிப்பதாகப் புராணரத்நத்தில் பராசர மஹர்ஷி கூறுகின்றார். (1-9-144.) *ராகவத்வேபவத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி, அந்யேஷு சாவதாரேஷு விஷ்ணோரேஷாநபாயிநீ. தேவத்வே தேவதேஹேயம்மநுஷ்யத்வேசமாநுஷீ; விஷ்ணோர் தேஹாநுரூபாம்வை கரோத்யேஷாத்மநஸ் தநும்.* இத்யாதிகள் காண்க. *அழகியாரிவ்வுலகு மூன்றுக்கும் தேவிமைதகுவார்பலருளர்* என்றும் *தக்கார் பலர் தேவிமார் சாலவுடையீர்* என்றும் பராங்குச பரகாலர்கள் பணித்தபடி க்ருஷ்ணாவதாரத்தில் தேவிமார் பலரிருந்தாலும் ருக்மிணிப்பிராட்டிக்கே ப்ராதாந்யமுள்ளது. இப்பிராட்டியின் விவாஹ சரித்திரத்தை நம்மாழ்வார் பெரியாழ்வார் ஆண்டாள் மூவருமே சிறிது அநுபவித்துவெளியிட்டுள்ளார்கள். *அன்றங்கமர்வென்று உருப்பிணி நங்கை அணிநெடுந்தோள் புணர்ந்தான்* என்பது நம்மாழ்வார்பாசுரம். *உருப்பிணிநங்கையைத் தேரேற்றிக்கொண்டு......*உருப்பிணி நங்கைதன்னை மீட்பான்......* என்பவை பெரியாழ்வார் பாசுரங்கள். *கண்ணாலங்கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான், திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து, அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப்பிடித்த பெண்ணாளன்* என்பது ஆண்டாள் பாசுரம்........................முன்னுரை முற்றிற்று..................................

இந்த ருக்மிணீ விவாஹ வ்ருத்தாந்தம் ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் ஐந்தாவது அம்சத்தில் இருபத்தாறுமத்யாயத்தில் அதிஸம்க்ஷிப்தமாக முடிக்கப்பட்டது, ருக்மிணியைக் கண்ணன் காதலித்திருந்தான். அவளும் கண்ணனைக் காதலித்திருந்தாள். கண்ணன் அவளைத் தனக்குக் கொடுக்கும்படி யாசித்தும் ருக்மிணியின் உடன் பிறந்தவனான ருக்மியானவன் த்வேஷத்தினாலே கண்ணனுக்குக் கொடாமல் சிசுபாலனுக்குக் கொடுப்பதாக வாக்களித்துக் கண்ணாலமும் கோடித்துவிட்டான். அப்போது அங்கு சிசுபாலாதிகள் வந்து சேர்ந்ததுபோல ஸ்ரீ க்ருஷ்ண பலராமாதிகளும் வந்து சேர்ந்தனர். விவாஹத்தின் முன்னாளே கண்ணன் ருக்மிணியைக் கவர்ந்து த்வாரகைக்குத் தேரேற்றிக்கொண்டு போனான். பிறகு ப்ரபலயுத்தம் நடக்க, வெற்றிபெற்ற கண்ணன் த்வாரகையில் ருக்மிணியை விதிபடி மணந்துகொண்டான்-என்னுமிவ்வளவே ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில்கூறிய கதை.

ஹரிவம்சத்தில் விஷ்ணு பர்வத்தில் 59. 60 ஆகிய இரண்டு அத்யாயங்களில் இக்கதை சிறிது விரிவாக வருணிக்கப்பட்டது அதிலும் ருக்மிணீஹரணம் சுருக்கமாகச் சொல்லப்பட்டு பிறகு நடந்த போர் மிக விரிவாக வருணிக்கப்பட்டிருக்கின்றஶ்ரீபாகவத — தசமஸ்கந்தத்தில் (52 53, 54 அத்யாயங்களில்) இக்கதை விரித்துரைக்கப்பட்டுள்ளது. அதனை ஸம்க்ஷேபித்து விஜ்ஞாபிக்கிறேனிங்கு. விதர்ப்ப தேசத்தரசன்பீஷ்மகனென்பவன். அவனுக்குஐந்துபுத்திரர்களும் புத்திரியுமிருந்தனர் அவள் தான் ருக்மிணியென்கிற கடைப்பெண். அவள் இயற்கையில் ஶ்ரீ மஹாலக்ஷ்மியின் அம்சமாதலாலும், தன் தந்தையைக் காண வருபவர்கள் பலரும் ஶ்ரீக்ருஷ்ண குண சேஷ்டிதங்களை மேம்படச்சொல்லக் கேட்டவளாதலாலும் கண்ணபிரான் மீது மிக்க மயல்கொண்டாள். அவனையே மணந்து கொள்வதாக வுறுதி கொண்டாள். கண்ணனும் ருக்மிணியின் குணாதிசயங்களைக் கேட்டிருந்து அவளையே நெஞ்சிற்கொண்டனன். இந்த ஸம்பந்தத்தை உற்ருருறவினரனைவரும் உகந்திருந்தினர்; ருக்மியென்கிற தமையன் மட்டும் கண்ணனிடத்துப் பகை கொண்டிருந்ததனால் தங்கையான ருக்மிணியை சிசுபாலனுக்கு மணம் புரிவிக்க எண்ணங்கொண்டான். இதையறிந்து மிக வருந்தின ருக்மிணி ஆப்தனானவோர் அந்தணனைக் கண்ணனிடம் தூதனுப்ப நினைத்தாள். தன் காதலைக்காட்டும் சில சுலோகங்களைப் பொறித்துப் பத்ரிகையொன்று கொடுத்தனுப்பினாள். அதைப் பெற்றுக்கொண்ட வந்தணன் விரைந்துசென்று த்வாரகா புரியைச் சேர்ந்து கண்ணபிரானைக்கண்டு பசிதீர்ந்து குசலப்ரச்னங்களெல்லாமான பிறகு ருக்மிணியின் ஸந்தேசத்தை கோப்யமாகக் கொடுத்தனன். ப்ரேமகனமான அப்பத்திரிகையிலிருந்த ஏழு சுலோகங்களையும் கண்ணபிரான் மிகுந்த குதூஹலத்தோடு வாசித்துப்பார்த்து உள்ளம் பூரித்தனன்.

அந்த ஸப்த ச்லோகியின் ஸாரமான கருத்தாவது, கண்ணா! உனது திருக்குணங்களைச் செவியுற்ற என்னுடைய மனம் நாணமற்று உன்பக்கலில் ஆழ்ந்து கிடக்கின்றது. ஸகல குணங்களும் நிரம்பிய உன்னை எந்த குலமகள் தான் விரும்பமாட்டாள்? செந்தாமரைக்கண்ணா! உனக்கே அற்றுத் தீர்ந்த வென்னை வேறொரு க்ஷத்ரன் தீண்டாதபடி நோக்கிகொள்ள வேணும். நான் செய்த பலவகைப்பட்ட ஸுக்ருதங்களினால் பகவான் உகந்திருப்பனாகில் சிசுபாலன் முதலான அற்பர்கள் என்னைத் தீண்டாதொழிய வேணும். நாளைவதுவைமணமென்று நாளிட்டு சிசுபாலனுக்கு என்னைக் கொடுப்பதாக நிச்சயித்திருப்பதால் நீ சேனைகள் சூழவிரைந்து இவ்விடம் ஏகாந்தமாக வந்து எதிரிகளைத் தொலைத்திட்டு என்னைக் கைக்கொள்ளவேணும். அந்தபுரத்தினுள்ளேயிருக்குமென்னைக் கைக்கொள்வதெங்ஙனமென்று விசாரப்பட வேண்டா; முன்னாள் தேவீபூஜைக்கென்று ஒரு புறப்பாடுண்டு மணமகளானவெனக்கு; அந்த ஸமயத்தில் என்னைக் கைக்கொள்வது எளிய வுபாயம். எவ்வகையினாலேனும் உன் திருவருளுக்கு நான் இலக்காகா தொழியில் வாழகில்லேன்; நூறு பிறவி பிறந்தாகிலும் உன்னைப் பெற்றே தீருவேன் — என்பதாம்.

இக்கருத்துக்கொண்ட சுலோகங்களை வாசித்த கண்ணபிரான் ஸந்தேசம் கொணர்ந்த அந்தணனை நோக்கி 'அவளுடைய காதலுக்குக் குறைந்ததன்று என்னுடைய காதல்; ஆனாலும் விரோதி கனத்திருக்கின்றது; இருக்கட்டும்; அவளை எப்படியாவது கைக்கொண்டே தீருவேன்' என்று சொல்லிச் சாரதியை யழைத்து விரைவில் தேரைக் கொண்டுவருமாறு கட்டளையிட அப்படியே ரதம் வந்து நின்றது. வந்த அந்தணனுடன் தேரின்மேலேறிப் புறப்பட்டு ஓரிரவில் விதர்ப்ப தேசம் வந்து சேர்ந்தாயிற்று. ருக்மிணியின் தந்தை தன்மகனுடைய வாக்குக்கு வசப்பட்டிருந்ததனால் மகளைச் சிசுபாலனுக்குக் கொடுக்க நிச்சயித்துச் சடங்குகளும் செய்தாயிற்று பாளை கமுகு பரிசுடைப் பந்தல்களும் தோரணாலங்காரங்களும் மற்றும் ஆச்சரியமான அமைப்புகளும் கண்டவிடமெங்கும் கண்களைக் கவருமாறு நிரம்பியிருந்தன. ருக்மணிக்கும் உத்தமமான அலங்காரங்களைச் செய்வித்து விவாஹ பூர்வாங்கச் சடங்குகளையெல்லாம் நிறைவேற்றியிருக்கையில், சிசுபாலனுடைய தந்தை தன் மகனுக்குச் செய்யவேண்டிய விவாஹ பூர்வாங்கச் சடங்குகளையெல்லாம் நிறைவேற்றியிருக்கையில், சிசுபாலனுடைய தந்தை தன் மகனுக்குச் செய்யவேண்டிய

விவாஹ விரதங்களைச் செய்வித்து முடித்துப் பெருங்கூட்டத்துடன் வந்துசேர, பேருவகை கொண்ட விதர்ப்பராஜன் அவர்களை வெவ்வேறு விடுதிகளிலே யிருத்தினான். கண்ணனுக்கு வைரிகளும் சிசுபாலனுக்குத் துணைவர்களுமான ஸால்வன் ஜராஸந்தன் தந்தவக்ரன் பௌண்ட்ரகன் முதலானோர் பலரும் வந்து பலாத்காரமாக ருக்மிணியைக் கைக்கொள்ளப் போகிறானென்று ஒரு ப்ரவாதம் ஊரில் பரவியிருந்தபடியால் அப்படி ஏதேனும் விரோதம் நேருமாகில் போர் மூட்டிப் புடைத்திடுவோம்' என்றும் சொல்லிக் கொண்டிருந்தனர்.

இச்செய்தி பலராமன் செவியில் விழ, கண்ணன் ஒருவனாகப் புறப்பட்டுச் சென்றிருப்பதை யறிந்து அதிசங்கித்து, பெருஞ்சேனைகளுடன் புறப்பட்டு உடனே விதர்ப்ப தேசத்திற்கு வந்து சேர்ந்தனன். க்ருஷ்ண பலராமாதிகள் அப்ரகாசமாகவே ஒருபுறமுறைந்தனர். ருக்மிணியோ துடிக்கிறாள். லக்னவேலை நெருங்குவதை நோக்கியும் கண்ணனிடமிருந்து ஒருசெய்தியும் கிடைக்காதது பற்றியும், போகவிட்ட அந்தணனும் மீண்டு வராதது குறித்தும் எண்ணுதன பலவுமெண்ணிச் சிந்தைக்கடலுளாழ்ந்து துவண்டு கிடக்கிறாள் சுபசகுனங்கள் தோன்றுகின்றன. ஸமயத்தில் கண்ணனாலனுப்பப்பட்ட அந்த அந்தணன் அந்தப்புறத்திலே வந்து ருக்மிணியைக் ஸந்தோஷிங் செய்தியைத் தெரிவித்துவிலகினான். பலராமனும் கண்ணனும் பரிஜந பரிவாரங்களுடன் விவாஹ மண்டபத்தருகில் வந்துசேர அவர்களைக் கண்ணாலங்காண வந்தவர்களாக நினைத்த அரசன் அவர்களுக்குத் தகுந்த மரியாதைகளைப்பண்ணி விடுதிகளிலேயிருத்தினான். கண்ணபிரான் வந்தனனென்று செவியுற்ற நகரத்தவர்களனைவரும் வந்து கண்ணனுடைய வடிவழகை நோக்கி 'நம்முடைய ருக்மிணிக்கு இவன் கணவனாக வாய்க்கமாட்டானா!' என்று இதுவே பேச்சாக விருந்தனர்.

இப்பால் ருக்மிணி அந்தப்புரத்தினின்று புறப்பட்டு இஷ்டதேவதையைத் தொழுவதற்கு எண்ணிறந்த பரிவாரங்களுடன் வீதியார வருகின்றாள். மத்தளங் கொட்டவும் வரிசங்கம் நின்றூதவும் வாய் நல்லார் நல்ல மறையோதவும் பாப்பனச் சிட்டர்கள் பல்லாரெடுத்தேத்தவும். மந்தகதியாக வருகின்றவள் அங்கு நிற்குமரசர்களையெல்லாம் கடைக்கணிக்கும் வியாஜமாகக் கண்ணனைக் கண்டு காமுற்ற வண்ணமாகவே தேரின்மீது ஏறப்புக,* **கண்ணாலங் கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான், திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து, அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப்பிடித்தபெண்ணாளன் பேணமூர் பேரமருங்கமே*** என்று ஆண்டாளருளிச் செய்தபடி அப்பிராட்டியைக் கண்ணன் கவர்ந்துகொண்டு விரோதி வர்க்கங்களைக் கிழக்கெடுத்துத்துவராபதியிற் சென்று சேர்ந்து சாஸ்த்ர விதிப்படி மணம்புரிந்து லக்ஷ்மீபதியாக விளங்கினான். ருக்மிணீ விவாஹோபந்யாஸம் முற்றிற்று.

இங்கொரு விஜ்ஞாபனம்;— ஸ்வாமி பணித்த யாதவாப்யுதயத்தில் பதினோராம் ஸர்க்கத்தின் முடிவில் பலராமரேவதிகளின் மணம் கூறித் தலைக்கட்டி பன்னிரண்டாம் ஸர்க்கத்தில் ருக்மிணீப்ரஸ்தாவம் தொடங்கப்பட்டது. இந்த ஸர்க்கம் பூர்த்தியாகப் பெரும்பாலும் ருக்மிணியின் ஸௌந்தர்ய லாவண்ய வர்ணநப்ரசுரம். அடுத்த பதின்மூன்றும் ஸர்க்கத்தில் கண்ணபிரானெழுந்தருள்வது முதலான சரிதைகள் சொல்லப்படுகின்றன. ருக்மிணி ஒரு ப்ராஹ்மணனைக் கண்ணனிடம் தூதனுப்பியதாக ஸ்ரீபாகவதத்தில் சொல்லப்படுகிறகதையை இதில் ஸ்வாமி யருளிச்செய்யாததனால் அது ப்ரக்ஷிப்தமாயிருக்குமோவென்று சிலர் சங்கிக்கிறார்கள். இந்த சங்கைவேண்டா. (யாதவா— ஸர்க 13 சுலோ. 20) *அஹம் த்வயா தூதமுகேந தூராத் ஸாத்வ்யா ஸமாஹூத இஹோபயாத:* என்பதில் "தூதமுகேந அஹம் த்வயா ஸமாஹூத:" என்றிருப்பது காண்க.

நாச்சியார் திருமொழியில் (6-9.) *பூங்கொள் திருமுகத்துமடுத்தூதியசங்கொலியும் சார்ங்க-வில்நாணொலியும் தலைப்பெய்வதெஞ்ஞான்றுகொலோ* என்றவிடத்துப் பெரியவாச் சான்பிள்ளை வியாக்கியானத்தில்-" இரண்டவதாரத்தில் இரண்டு பிராட்டிமார்க்கு உதவினது தனக்கொருத்

திக்குமே வேண்டும்படியாய்த்து இவள் தசை சிசுபாலன் ஸ்வயம்வரார்த்தமாக வொருப்பட்ட ஸமயத்திலே புறச்சோலையிலே ஸ்ரீபாஞ்ச ஜந்ய கோஷமானது வந்து தரிப்பித்தது ருக்மிணிப்பிராட்டியை;......'' என்கிற ஸ்ரீ ஸூக்தியுள்ளது. இதையடியொற்றி ஸ்வாமி (யாதவாப்யுதயே-12. ஸ. முடிவு சுலோகத்தில்( ருக்மிணிப்பிராட்டியின் துடிப்பு தவிர்ந்து தரிப்பு உண்டானதற்கான நிமித்தங்களைச் சொல்லுமடைவில் *ப்ரத்யாஸந்நம் முஹூர்தசரத் பாஞ்சஜந்யப்ரணாத:* என்றருளிச் செய்தார் ஸ்ரீபாகவதத்தில் (10-52-97ல்) *ஏவம் வத்வா: ப்ரதீக்ஷந்த்யா கோவிந்தாகமநம் ந்ருப, வாமஊருர் புஜோ நேத்ரம் அஸ்புரந் ப்ரியபாஷிண:* என்று இவ்வளவே சுபநிமித்தங்களுண்டானதாகச் சொல்லிற்று. ஸ்வாமி தேசிகன் *ஊருஸ் ஸவ்யோ நயநகமலம் ப்ரூலதா சாபி தஸ்யா: ப்ராவேபந்த* என்று அந்த சுப சகுனங்களையும் ஸாதித்து, பாஞ்ச ஜந்ய ப்ரணாதத்தையும் ஸாதித்துத் தலைக்கட்டினார *அசோகவனத்தில் மாயாசிரஸ்ஸைக் கண்டு கலங்கியிருந்த பிராட்டியை சார்ங்கவில் நாணொலி தரிப்பித்தது. கண்ணனெழுந்தருளாமை பற்றிக் கலங்கித் துடித்திருந்த ருக்மிணியைப் *பூங்கொள் திருமுக்த்து மடுத்தூதிய சங்கொலி தரிப்பித்தது -என்று பெரியவாச்சான் பிள்ளை யருளிச்செய்தது........................................................

# வத்ஸலாபரிணயகதை

கீழே துலாபாரக்கதை விஜ்ஞாபிக்கும்போது தெரிவித்த அவதாரிகை இங்கும் ஸ்மரிக்கத்தக்கது. வத்ஸலாஹரணோபந்யாஸமென்றும் இதை நிர்தேசிக்கலாம். ஜநமேஜயர் 'வத்ஸலாஹரணம் ப்ரூஹி, என்று கேட்க, ஜைமிநி:= ''இந்த்ரப்ரஸ்தே புரா பாண்டுபுத்ரா: கில நிவாஸிந:, தைவாத த்யூதப்ரஸங்கேந வநவாஸச் சதை: க்ருத:' என்று ஆரம்பமுள்ளது; எண்பது சுலோகங்களுள்ளன ஜநமேஜய மஹாராஜனுக்கு ஜைமிநி மஹர்ஷி வத்ஸலாஹரணகதை சொல்லுவதாக வொருபுராணம் குந்தி ஸுபத்ரை அபிமந்யு ஆகிய இவர்களைப் பாண்டவர்கள் ஹரித்வாரத்தில் விதுரக்ருஹத்தில் இருக்கச் செய்து த்ரௌபதியுடன் காட்டுக்குப் புறப்பட்டு விட்டார்கள். அந்த ஸமயம் துர்யோதனன் சகுனியைப் பார்த்துச் சொல்லுகிறான். நம்முடைய யுக்திஒன்றும் பலிக்கவில்லையே; எவ்வளவோ சூழ்ச்சிகள் செய்தும் பாண்டவர்கள் இன்னமும் சாகாமல் கொழுத்திருக்கிறார்களே. இதற்குக் காரணம் கிருஷ்ணன் அவர்களுக்குப் பக்ஷபாதியாயிருப்பதுதான். அந்தக்ருஷ்ணனை எப்படியாவது நம்பக்ஷத்தில் சேரும்படி செய்ய முடியாதா? என்று, அதற்கு சகுனி சொன்னான்— 'பலராமனுக்கு வத்ஸலையென்று ஒரு பெண்மகளிருக்கிறாளே; அவளை உன்மகன் லக்ஷ்மணனுக்கு விவாஹம் செய்வித்து விட்டால் கண்ணன் நமக்கு ஸம்பந்தியாய் விடுவன்; மேற்கொண்டு சொல்லவேண்டியது என்ன இருக்கிறது? என்று இது நல்ல உபாயமென்று ஆமோதிக்கப்பட்டவுடனே விவாஹ நிச்சயம் செய்ய த்வாரகைக்குப் புறப்பட்டு விட்டான் சகுனி. அங்கு வார்த்தை நடந்தது, பலராமனுக்கும் ரேவதிக்கும் ஸம்மதமாயிருந்தது. ஆனாலும் கண்ணனுடைய அபிப்பிராயத்தையும் தெரிந்துகொள்ள விரும்பினார்கள். கண்ணன் 'முத்தண்ணா! ஸுபத்ரையின் புத்திரனை அபிமந்யுவுக்கு வத்ஸலையைக் கொடுப்பதாக ஏற்கெனவே வாக்குதத்தம் செய்திருப்பதை மறந்து விட்டீரோ? என்றான், அதற்கு பலராமன் சொன்னதாவது, 'மறந்தேனல்லேன் அப்போது பாண்டவர்கள் நல்ல ஸ்திதியிலிருந்தார்கள். அந்த ஸ்திதிமாறிவிட்டதே என்று; அதற்குமேல் கண்ணன் அப்படியானால் ஸரி; தெய்வஸங்கல்பம் போல் நடக்கட்டும். என்று சொல்லிவிட்டான். உடனே பலராமன் விவாஹ நிச்சயம் செய்து சகுனியிடம் லக்ன பத்ரிகையும் கொடுத்துவிட்டான் அந்தப் பத்ரிகை துர்யோதனனுக்குக் காட்டப்பட்டது. அது பீஷ்மத்ரோணாதிகளின் பார்வைக்கும் வந்தது. மற்றும் பெரியோர்கள் அதைப்பார்த்து 'இதை ஸ்ரீக்ருஷ்ணப்ரபு ஆமோதித்திருக்கமாட்டார்; ஆகவே இந்த விவாஹம் நடைபெறாது, என்று சொல்லிக்கொண்டார். இது ஏகாந்தமான வார்த்தையேயொழிய வெளிப்படையானதன்று.

துர்யோதனாதிகள் விவாஹ ஸம்ப்ரமங்கொண்டு த்வாரகைக்குப் புறப்பட்டு விட்டார்கள். அதற்குமுந்தி துர்யோதனனுக்கு ஓர் ஆலோசனை தோன்றிற்று. (அதாவது) ஸுபத்ரையினாலும்,

அபிமந்யுவாலும் இந்த விவாஹத்திற்கு ஏதேனும் இடையூறு விளையக் கூடும்; ஆகவே ஓர் உபாயம் செய்வோம்; இந்த லக்ன பத்ரிகையை ஸுபத்ரைக்கு அனுப்பினோமாகில் அவள் பார்த்து அஸஹிஷ்ணுதையாலே மூர்ச்சையடைந்திடுவள்' உயிரையும் துறந்திடுவள் அபிமந்யுவுக்கும் இதே கதியாகும். பிறகு விவாஹம் இடையூறென்றுமின்றி நடைபெறும்-என்று. பிறகு இவ்வாலோசனையின்படியே செய்ய. ஸுபத்ரை மூர்ச்சையடைந்து விட்டாள். இதையறிந்த அபிமந்யு வந்து தாயைத் தேற்றி 'கண்ணனுடைய உதவியினால் வத்ஸலையை நானே மணந்து கொள்வேன், என்றான். ஸுபத்ரை ஸாரத்யம் செய்ய அபிமன்யு ரதத்திலேறி த்வாரகைக்கு விரைந்து செல்லப் புறப்பட்டான், ரதம் செல்வதற்குக் காடுகள் இடையூறாயிருந்தனால் தன்னுடைய அம்புகளால் காட்டையழித்துக்கொண்டே சென்றான். அந்தக்காடு பீமஸேனனுக்கு இடிம்பியினிடம் பிறந்த கடோத்கசனுடையது. ஆகையால் அவன் கோபங்கொண்டு அபிமந்யுவைக் கொன்றுவிட்டான். ஸுபத்ரை தன் மகன் மாண்டதற்காக அழுது கொண்டிருக்கையில் பகவானே பராசக்தி ரூபமாக வந்து தான் கொண்டு வந்திருந்த அம்ருத கலசத்தில் ஸுபத்ரையினுடைய இரு கைகளையும் வைக்கச் சொல்லி, ஒருகையால் அபிமந்யுவைத் தடவிக்கொடுத்தால் அவன் பிழைத்து விடுவனென்றும் மற்றொரு கையால் வேறு யாராவது இறந்தால் அவனையும் பிழைப்பிக்கலாமென்றும் சொன்னார். அப்படியே அபிமந்யு பிழைத்து கடோத்கசனைக் கொன்றொழித்தான். தன் மகன் மாண்டதற்காக ஹிடிம்பி பஞ்ச பாண்டவர்கள் பேரைச் சொல்லி அலறினாள். அப்போது விசாரிக்கையில் கடோத்கசன் அபிமந்யுவுக்கு அண்ணனென்று தெரிந்து கொண்ட ஸுபத்ரை மற்றொரு கையால் அவனைத்தடவிக்கொடுத்து அவனையும் உயிர் மீட்டனள்.

க்ருதஜ்ஞதையுள்ள கடோத்கசன் அபிமந்யுவுக்கு அவசியம் வத்ஸலையைத் தான் முன்னின்று மணம் புரிவிப்பதாக வாக்குறுதி கூறினன். தன்னுடைய அஸுரகணங்களின் உதவியினால் த்வாரகையிலிருந்த கல்யாணப் பந்தலை ரைவதககிரியில் கொண்டுபோய்ச் சேர்த்து விட்டான். அன்றியும், துரியோதனன் மனைவியான பானுமதியின் வேஷங்கொண்டு வத்ஸலைக்கு ஏதோ ஆடையாபரணங்கள் அணிவிக்க வேண்டுமென்கிற வியாஜத்தினால் மணமகளான அவளையும் அழைத்து வந்து ஸுபத்ரையிடம் சேர்த்து விட்டான் இதனிடையில் இந்திரஜாலத்தினால் ஒரு கடைத்தெருவை நிர்மாணம் செய்து அஸுரர்களையெல்லாம் ஆடையாபரணங்களாக வடிவெடுக்கச் செய்து விட்டான். விவாஹத்திற்காக வந்திருந்த துர்யோதநபரிவாரங்கள் இந்த மாயாவஸ்த்ரங்களை வாங்கியணிந்துகொண்டன. கடோத்கசன் வத்ஸலையாக வேஷம் பூண்டாள். அந்த பொய் வத்ஸலையை சகுனிமாமா மாலைமாற்றுவதற்காகத் தன் தோளின் மீது தூக்கிக்கொள்ள (அந்தப் பெண் உண்மையில் கடோத்கசனேயாகையால் பாரம் தாங்கமாட்டாமல் இடுப்பொடிந்து விழுந்து விட்டான் சகுனி. வரனுக்கு [துர்யோதந புத்ரலக்ஷ்மணனுக்கு] மணமகள் பெண் குரங்குரங்காகத் தென்பட்டதனால் அவன் இந்தக் கல்யாணம் வேண்டாவேயென்று அலறினான். இதே சமயத்தில் துர்யோதனாதிகளின் மாயாவஸ்த்ரங்களெல்லாம் பறந்து போய் அனைவரும் திகம்பரராகி அவமானப்பட்டு அஸுரர்களால் வெருட்டியோட்டப் பட்டார்கள். இதே தருணத்தில் கண்ணபிரான் முன்னின்று அந்த ரைவதககிரியிலேயே வத்ஸலைக்கு அபிமந்யுவோடே விவாஹத்தை நிறைவேற்றி வைத்தனன். யதோக்தமாகத் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது வத்ஸலாவிவாஹம் முற்றிற்று. முடிவாகவொரு வார்த்தை;—ஹரிகதாகாலக்ஷேபமென்பது மஹாராஷ்ட்ர தேசத்தில் மலிந்திருந்து க்ரமேண தமிழ்நாட்டிற்கு வந்தது. நாம் ஷோலாபூர் பூனா போயிருந்தபோது அங்கு துலாபாரக்கதையும் அடிக்கடி அனேக ப்ரதேசங்களில் நடைபெறுவதாகக் கேட்டிருந்தோம்; இவற்றின் தத்துவத்தைப் பகவானே உணரவேண்டும்......................

## வத்ஸலாபரிணயம் முற்றிற்று.

—*—

# ப்ரஹ்லாத பக்தி யுபந்யாஸம்.

பக்த கோஷ்டியில் ப்ரஹ்லாதாழ்வான் ப்ரதம பரிகணநீயன். ஸ்ரீபராசர பகவான் தமது புராணரத்நத்தில் ப்ரஹ்லாதாழ்வான் பெருமையைச் சொல்லு மிடத்து (1-15-156) * தர்மாத்மா ஸத்ய சௌசாதி குணாநாமாகர: பர:* என்று சொன்னது பெரிதன்று. அதற்கடுத்தபடியாக *உபமாநமசேஷாணாம் ஸாதூநாம் யஸ் ஸதாபவத்* என்றதுதான் ஈடுமெடுப்பு மில்லாதவார்த்தை. மஹர்ஷிகளின் காலத்திலே ஸாதுக்களுக்கு உபமாநம் சொல்லும்போது ப்ரஹ்லாதாழ்வானைச் சொல்லுவர்கள்; ஆழ்வார்கள் காலத்திலே *அல்வழக்கொன்றுமில்லா அணி கோட்டியர்கோன் அபிமானதுங்கன் செல்வனைப் போல * என்னநின்ற செல்வநம்பியை உபமானமாகச் சொல்லுவர்கள். ஆசாரியர்களின் காலத்தில் *மொழியைக் கடக்கும் பெரும்புகழான் வஞ்ச முக்குறும்பாங் குழியைக் கடக்கும் நம் கூரத்தாழ்வானை உபமானமாகச் சொல்லுவர்கள். ஒரு புராண பண்டிதர் ப்ரஹ்லாதனைப் பற்றி நிந்தனையாக வெழுதினவொரு சிறு புத்தகத்தில் "உபநிஷத்தில்*பித்ரு தேவோ பவ. ஆசார்ய தேவோ பவ* என்றதற்கு நேர்மாறாக பித்ருத்ரோஹத்திலும் ஆசார்யத்ரோஹத்திலும் தலைநின்ற ப்ரஹ்லாதன் எப்படி பக்த னுவானோ தெரிய வில்லை' என்றெழுதியுள்ளார். *குரோரப்யவலிப்தஸ்ய கார்யாகார்யமஜாநத:, உத்பதம் ப்ரதிபந்நஸ்ய ஸத்யாஸ் த்யாகோ விதீயதே* இத்யாதி சாஸ்த்ரங்களை யறியாமல் பேசுமவர்களின் பேச்சுக்கு நாம் செவி கொடுப்போ மல்லோம்.

ப்ரஹ்லாதாழ்வான் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு விஜயத்வஜ மானவன் என்பது பெரியோர்களின் கொள்கை; பகவான் ஸகல சராசரங்களையும் சரீரமாகக் கொண்டு தான் சரீரியாய் [அந்தர்யாமியாய்] நிற்கிறுனென்பது தானே விசிஷ்டாத்வைத ஸித்தாந்தம். இதனை நன்கு கண்டறிந்து பிறர்களுக்கும் நன்ருகக் காட்டினவன் ப்ரஹ்லாதாழ்வானொருவனே. *அந்தர் பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:* என்கிற ச்ருதியை அத்வைதிகளும் ஓதுகின்றுர்கள், உபந்யஸிக்கின்றுர்கள் எனினும் இந்த ச்ருதி அவர்களது கொள்கைக்குச் சிறிதும் கை கொடுப்பதில்லை. ஸுபாலோப நிஷதாதி ப்ரஸித்தமாய் ஸர்வாந்தர்யாமித்வ பர்யவஸாயியான சரீராத்ம பாவத்தை அத்வைதிகளும் இசைந்தார்களாகில் அவர்களும் விசிஷ்டாத்வைதிகளாக விளங்கக் குறையில்லையே. நாம் ப்ரதாநப்ரதிதந்த்ரார்த்தமென்று கொள்ளுமதனைத் தானே ப்ரஹ்லாதாழ்வான் நிதியாகக் கொண்டு வெற்றி பெற்றது. *ஸர்வபூதாத்மகே தாத! ஜகந்நாதே ஜகந்மயே, பரமாத்மநி கோவிந்தே மித்ராமித்ரகதா குத:? * என்று இச்சிறுவன் தந்தைக்கு உபதேசம் பண்ணினதும் இதுதானே. *எங்குமுளன் கண்ணனென்ற மகனைக் காய்ந்த இரணியன், எங்கு முளனென்ற தத்துவத்தை யன்றே ப்ரத்யக்ஷீகரித்தான். *ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேந்மதுஸூதந:, ஸாத்விகஸ் ஸது விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த சிந்தக:* என்கிறபடியே கருவிலே திருவுடையானிவன். தாயான கயாதுவின் கருவிலே இவன் வஸிக்கும்போதே நாரத மஹர்ஷியால் திருவஷ்டா க்ஷரோபதேசம் பெற்றவனிவன். ஆகவேதான் பரிமளத்தோடு கூடவே அங்குரிக்கும் திருத்துழாய் போலே இவனும் ஸஹஜஜ்ஞாநபக்திகளுடன் தோன்றினுன். இவன் தன்னுடைய பக்திச் செல்வத்தைப் பலபடிகளாலே வெளியிட்டுள்ளான். (ஸ்ரீவிஷ்ணுபு—பதினேழாமத்யாயத்தில் *ச்ரூயதாம் பரமார்த்தோ மே தைதேயா திதிஜந்மஜா:!* என்று தொடங்கி ஒரு முப்பத்தைந்து சுலோகங்களாலே ஸமவயஸ்கர்களான அஸுர குமாரர்களுக்கு உபதேசிக்கும் அர்த்தங்கள் உண்மையில் அவனுடைய பிரதிஜ்ஞை யின்படி பரமார்த்தமே. பல பல வகையான ஆபத்துக்களை விளைத்தும் ஒன்றுக்கும் சளைக்காத விவனை தந்தையான இரணியன் அருகே யழைத்து, பிள்ளாய்! உன்னுடைய பிரபாவம் அபரிமிதமாகக் காண்கிறதே; இதற்கு என்ன காரணம்? இயற்கையான பெருமையா இது? ஏதேனும் மந்த்ரஸக்தி பெற்றிருக்கிருயா? சொல்லு' என்று வினவ; அதற்கு விடை கூறும் சிறுவன் *"ந மந்த்ராதிக்ருதஸ் தாத! நைவ நைஸர்கிகோமம, ப்ரபாவ ஏஷ ஸாமாந்யோ யஸ்ய யஸ்யாச்யுதோ ஹ்ருதி" என்று தொடங்கி ஆச்சரியமாகச் சொல்லுகிருன் அவிவேகிகளில் தலைவனை அத் தந்தை சிறுக்கன் பக்கலில் குணங்கண்டு ஆசார்ய ப்ரதிபத்தி பண்ணவேண்டி யிருக்க; அதற்குநேர்மாருகச் சீற்றமே மேலிட்டு "இப்பயலை கிரிப்ருஷடத்தில் தள்ளுங்கள்; நெருப்பிலிட்டுப் பொசுக்குங்கள் கடலில் தள்ளுங்களென்ருன்." இவன் உண்மையான தந்தையா?

# எம்பெருமானார் பெருமையநுபவம் முன்தொடர்ச்சி

32. கண்ணன் நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்து கொள்ளுதற்காக அவளது தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி அஸுராவேசம்பெற்ற ஏழு எருதுகளை வலியடக்கி அப்பிராட்டியை மணஞ்செய்துகொண்டனன். நம்பரமாசார்யர் ''எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கள ஸூத்ரம் போலே திருமந்த்ரம்'' [முமுக்ஷுப்படி 113] என்கிறபடியே திருமந்த்ரமாகிய திருமங்கலியத்தைச் சேதநர்களுக்குக் கட்டி விவாஹம் நடத்துகைக்கு அங்கமாக, காமம், க்ரோதம், லோபம், மோஹம் மதம் மாத்ஸர்யம் அஸூயை என்கிற ஏழு விரோதிகளையும் தொலைத்தருளினர்.

33. கண்ணன் இரண்டு மல்லர்களை மடித்ததுபோல ஆசிரியர் * நீர்நுமதென்றிவை வேர்முதல் மாய்த்து * என்கிறபடியே அஹங்கார மமகாரங்களை அடியறுத்தவர். கண்ணன் குவலயாபீடமென்கிற மதயானையை முடித்தாப்போலே ''மதக்களிறைந்தினையும் சேரி திரியாமல் செந்நிறீஇ'' என்கிற பொய்கையார் பாசுரத்தின்படியே மதகளிறுகிய இந்திரியத்தின் துஷ்டத்தன்மையைத் தொலைத்தவர். கண்ணன் மாலாகாரர் திருமாளிகைக் கெழுந்தருளி அவர் தந்த பூவைப் பெற்று உகந்ததுபோல நம் ஆசிரியர் * அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் புஷ்ப மிந்த்ரிய நிக்ரஹ: ஸர்வபூததயா புஷ்பம் க்ஷமா புஷ்பம் விசேஷத:. ஜ்ஞாநம் புஷ்பம் தப: புஷ்பம் த்யாநம் புஷ்பம் ததைவச, ஸத்யமஷ்டவிதம் புஷ்பம் விஷ்ணோ: ப்ரீதிகரம் பவேத் என்னப்பட்ட எண்பகர் பூவையும் சிஷ்யர்கள்பக்கலிலே செழித்து வளரக் காணப்பெற்றுக் களித்தவர்.

34. கண்ணபிரான் கம்ஸ சிசுபால கௌரவ ப்ரப்ருதிகளை முடித்துப் பஞ்ச பாண்டவாதிகளை வாழ்வித்ததுபோல நம் பரமாசார்யர்* தற்கச் சமணரும் சாக்கியப்பேய்களும் தாழ்சடையோன் சொற்கற்ற சோம்பரும் சூனியவாதரும் நான்மறையும் நிற்கக் குறும்பு செய்நீசரும் மாண்டனரென்னும்படியாக *நாட்டிய நீசச் சமயங்களை மாள்வித்து அர்த்த பஞ்சகம் முதலிய விசேஷார்த்தங்களை எங்கும் விளங்கச்செய்தனர், இங்ஙனே மற்றும் பலவும் காண்க. நமது வடமொழிநூலில் விரித்துரைக்கப்பட்டுள்ளது

35. மணவாளமாமுனிகள் யதிராஜவிம்சதியில் இரண்டாவது ச்லோகத்தில் எம்பெருமானாரை ஹம்ஸமாகவும் வண்டாகவும் அருளிச்செய்துள்ளார். *ஸ்ரீரங்கராஜசரணாம்புஜராஜஹம்ஸம்* என்றும் *ஸ்ரீமத்பராங்குசபதாம்புஜப்ருங்கராஜம்* என்றும். (அதாவது) ஸ்ரீரங்கநாதனுடைய திருவடித்தாமரைகளிலே ராஜஹம்ஸமாயிருப்பவர்; நம்மாழ்வாருடைய திருவடித்தாமரைகளிலே சிறந்த வண்டாக இருப்பவர் என்று கூறியவாறு. எம்பெருமானார் *தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப் பூண்டவன்பாளன்* [இராமாநுச நூற்றந்தாதி—31] என்கிறபடியே தேவப் பெருமாள் திருவடிவாரத்திலே பேரன்பு பூண்டவராயிருந்தும் ஸ்ரீரங்கநாதனின் விசேஷகடாக்ஷம் செய்தருளப்பெற்றுத் தென் திருவரங்கம் சென்று சேர்ந்து *யாவச்சரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ* இவ்வுடல் விழுந்தளவும் இந்தத் திருவரங்கம்பெரிய கோயிலிலேயே இனிது வாழக்கடவீர்—ஸ்ரீரங்ககத்யம்-19.] என்று திருவரங்கச் செல்வனாரால் அநுக்ரஹிக்கப்பட்டு அப்பெருமானுடைய திருவடிவாரத்தின் கீழேயே இனிது வாழ்ந்தபடியினால் [ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜ ராஜஹம்ஸம்] என்றருளிச் செய்யலாயிற்று. இனி ஸ்ரீமத் பராங்குச பதாம்புஜப்ருங்கராஜம் என்ற விசேஷணத்தினால்—ஸ்வாமி நம்மாழ்வாரது திருவடித்தாமரைகளிலே வண்டுபோல் படிந்திருப்பவரென்றது.

36. ஆகவிப்படி ஸ்வாமியை ஹம்ஸமாகவும் வண்டாகவும் கூறினதிலிருந்து தேறுகின்ற ஸ்வாமியினது சில பெருமைகளை ஸ்வாபதேசார்த்தாநுபவப்ரணாளியாலே வெளியிடுகிறோமிங்கு. ஆழ்வார்கள் தமது திவ்யப்ரபந்தங்களிலே அன்னங்களையும் வண்டுகளையும் தூது விடுவதாக அருளிச்செய்வதுண்டே: அங்கு எம்பெருமானார் போல்வாரான மஹாசார்யர்களையே தூது விடுவதாக உள்ளுறை பொருளாகையாலே அதைத்திருவுள்ளம்பற்றி ஸ்வாமியையிங்கு அன்னமாகவும் வண்டாகவுமருளிச் செய்வது மிகப்பொருத்தம். அன்னத்தின் படிகளும் வண்டின் படிகளும் ஸ்வாமி பக்கலிலே நிரூபிக்கப்படுகிறபடியைக் காணீர் :—

37. ஹம்ஸத்திற்குள்ள தன்மைகள் ஸ்வாமி பக்கலிலேகுறையற்றிருக்கின்றன. எங்ஙனே யென்னில்:(1) நீரையும் பாலையும் கலந்துவைத்தால் அவற்றைப் பிரிக்கவல்லமையுடையது ஹம்ஸம் என்று பிரமாணங்களினாலறிகின்றோம்: *ஹம்ஸோ யதா க்ஷீரமிவ அம்பு மிச்ரம்* என்பது முதலான வசனங்கள் காண்க. இதனால் ஹம்ஸமானது ஸாராஸாரவிவேகத்தில் மிகுந்த வல்லமையுடையது என்பது தேறும். ஸ்வாமி தாமும் *அஸாரமல்பஸாரஞ்சஸாரம் ஸாரதரம் த்யஜேத் பஜேத், ஸாரதமம் சாஸ்த்ரே * என்றபடி ஸாராஸாரமிச்ரமாயிருந்த சாஸ்திரங்களிலே அஸாரமாயும் அல்பஸரமாயுமுள்ளவற்றை யெடுத்துத்தள்ளி மிகவும் ஸாரமானவற்றையே கைக்கொண்டவர். பாஹ்யமதங்களையும் குத்ருஷ்டி மதங்களையும் நிரஸித்து ஸ்ரீமத்வேதமார்க்கப்ரதிஷ்டாபநாசார்ய உபயவேதாந்தப்ரவர்த்தந ப்ரவீணரா யெழுந்தருளியிருந்து ரஹஸ்யார்த்தங்களில் பஹிரங்கமான அர்த்தங்களைத் தள்ளி அந்தரங்க மான அர்த்தங்களைக் கொண்டருளினர் என்பது இங்கு விவக்ஷிதம்.

38. அப்படிப்பட்ட அர்த்தங்களில் ஒன்று இங்கு எடுத்துக்காட்டுவோம்; திருவாய்மொழி வியாக்கியானத்தில் பல விடங்களில் எம்பெருமானாருடைய நிர்வாஹமென்று விலக்ஷணமான அர்த்தங்கள் எடுத்துக்காட்டப்படுகின்றன. அவற்றுள் ஒன்று கேண்மின்; உயர்வறவுயர்நலம்* என்கிற முகற்பாட்டினீற்றடியில்* துயரறுசுடரடி* என்றுள்ளவிடத்திற்கு ''அடியார்களுடைய துக்கங்களையெல்லாம் அறுக்கிற [அதாவது போக்கடிக்கிற] திருவடி'' என்று எம்பெருமானார்க்கு முன்புள்ள ஆசாரியர்கள் அருளிச் 'செய்தார்களாகவும், எம்பெருமானார் அப்படி யன்றிக்கே [அதாவது துயரறுக்குஞ் சுடரடி யென்று கொள்ளாமல்] 'துயரறும் சுடரடி' என்றுகொண்டு தனக்குண்டான துயரைத் தான் தவிர்த்துக்கொள்ளுந் திருவடியென்று பொருளருளிச் செய்த தாகவும் வியாக்கியானமுள்ளது. பூருவர்கள் பணித்த அர்த்தத்திற்காட்டிலும் ஸ்வாமிபணித்த அர்த்தத்தில் என்ன சிறப்பு? என்பதை ஆராய்ந்து அறியவேணும். எம்பெருமான் அடியார்கள் படுந்துயரைத் தீர்க்கிறானென்பது இதிஹாஸ புராணாதிகளில் தேறின அர்த்தமே; அது மறுக்கத் தக்கதன்று. எம்பெருமானார் அதைத்தள்ளி வேறு பொருள் பணித்ததானது அப்பொருள் அஸம்பத்தம் என்கிற திருவுள்ளத்தினாலன்று; அதிற்காட்டிலும் மிகுந்த ஸ்வாரஸ்யம்பெற்று நெஞ்சை யுருக்கும்படியான அர்த்தம் இது என்பதே ஸ்வாமியின் திருவுள்ளம். அடியவர்கள் துயருறுங் காலத்தில் எம்பெருமான் தானும் துயருற்றிருப்பதாக இதிஹாஸங்களினாலறிகின்றோம். துயருறு வது என்பது ஹேய குணமாயிற்றே; ஸமஸ்த கல்யாண குணாத்மகனான எம்பெருமானிடத்தில் இந்த ஹேயகுணமிருப்பதாக இசையலாமோ வென்று சங்கிப்பாருடைய சங்கையைப் போக்கிக் கொண்டே வால்மீகி பகவான் ஸ்ரீ ராமாயணத்தில் அயோத்யாகாண்டத்தில் நகரத்து ஜனங்கள் இராமனுடைய திருக்குணங்களைப் புகழ்ந்து கூறுவதாக இட்ட ஸந்தர்ப்பத்தில் *பஹவோ ந்ருப கல்யாண குணா: புத்ரஸ்ய ஸந்தி தே * என்று திருக்கல்யாண குணங்களையே தாங்கள் தசரத சக்ர வர்த்தியிடம் எடுத்துக் கூறப்போவதாக, ப்ரதிஜ்ஞை செய்வதை முன்னம் காட்டிவிட்டு, மேலே

"வ்யஸநேஷு மநுஷ்யாணு ப்ருசம்பவதிதுக்கித." என்று [மனிதர்கள் துயருறுமிடத்து இராமபிரான் தான் மிகமிகத் துயருறுவதாகச்] சொல்லி இதையொரு கல்யாண குணமாக நாட்டிவைத்தார். அடியார்கள் படுந்துயரை அறுக்கின்முன் பகவான் என்பது இருக்கட்டும்: அவ்வடியார்கள் துயர் தீரும்வரையில் தானும் துயருற்றவனுகவேயிருந்து அவர்கள் துயரற்றபிறகே தானும் துயரற்றவனுகை என்னுமிப்பொருள் பகவத்குணுநுபவரஸிகர்களுடைய நெஞ்சையுருக்குமாதலால் இச்சிறந்த பொருளை எம்பெருமானுர் திருவுள்ளம்பற்றினுரென்க. இத்திருக்குணத்தை வால்மீகிபகவான் ஸ்ரீ ராமாயணத்தில் ஓரிடத்திலன்றி, பலவிடங்களிலும் மூதலிக்கிறபடி காணீர் அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம், க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ * (ஸம்க்ஷேபரா-85.) என்ற ச்லோகத்தில் விஜ்வர: என்கிறபதம் உயிரானது விபீஷணுழ்வான் துயர் தீர்ந்து முடிசூடும்வரையில்-பெருமாள் தாம் துயருற்றிருந்ததாகவும் அவனை முடிசூட்டியே தாம் துயர்தீரப்பெற்றதாகவும் நன்கு விளக்குகின்றதன்றே விஜ்வர என்னுமிப்பதம். இப்படிப்பட்ட ஸாரப்பொருள்களை விவேகித்து வெளியீடுவதனுல் ஸ்வாமி ஹம்ஸமென்னத்தகுந்தவர்.

39. இன்னமும், சாந்தோக்ய உபநிஷத்தில் ஜானச்ருதியின் உபாக்யானமொன்று ஓதப்பட்டிராநின்றது ஜாநச்ருதியென்கிற க்ஷத்ரியன் மிக்க பெருஞ்செல்வம்படைத்தவனுகையாலே அன்னதானம் முதலியன விசேஷமாகச் செய்து கொண்டிருந்தான். ஆனுல் அவனுக்கு ப்ரஹ்மஜ்ஞானமென்பது சிறிது மில்லாமலிருந்து பல்ல பல்லாக்ஷ ரென்கிற இரண்டு மஹரிஷிகள் அவனிடத்திலே இரக்கங்கொண்டு இவனுக்கு ப்ரஹ்மஜ்ஞானத்தையுண்டாக்க வேணுமென்றெண்ணி இரண்டு ஹம்ஸரூபிகளாய் அவன்மேலே பறந்துகொண்டு போகையில் பல்ல னென்கிற ஹம்ஸம் பல்லாக்ஷ னென்கிற ஹம்ஸத்தைப்பார்த்து 'ஜாநச்ருதிமஹாப்ரபுவின் மேலே நிழல் படாதபடி கவனித்துப்போ' என்று சொல்லிற்று. அது கேட்ட அந்த ஹம்ஸம், "இவன்மேல் நிழல் பட்டாலென்ன? அதனுலென்ன கெடுதல்? இவன் ரைக்வரைப்போல் ப்ரஹ்மஜ்ஞாநியா என்ன? ஞானஹீநனுனவிவனை நாம் கௌரவிக்க வேணுமோ?" என்று அவஹேளனமாகச் சொல்லிற்று. அதை கேட்ட ஜாநச்ருதி துக்கங்கொண்டவனுய் அந்த ரைக்வரைத்தேடிச் சென்று அநுவர்த்தித்துப்ரஹ்மவித்தையை உபதேசிக்கவேணுமென்று பிரார்த்தித்து அவரிடத்தில் உபதேசம் பெற்றுனென்பது அவ்வுபாக்கியனத்தின் ஸாரம். இக்கதையின்படி ப்ரஹ்மஜ்ஞான ப்ராப்திக்கு ஹம்ஸம் ப்ரேரகமானது போல எம்பெருமானுர் தாமும் அதற்கு ப்ரேரகர் என்பது அறியத் தக்கது' பாருலகிலாசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறுமென்று பேசி வரம்பறுத்தார்பின் என்று உபதேச ரத்தினமாலையிலருளிச் செய்தபடி ஸ்வாமி நியமனம் தந்தருளாவிடின் இவ்வுலகில் ப்ரஹமஜ்ஞானப்ரசாரத்திற்கு வழியேயில்லையாமன்றே.

40. எம்பெருமான் வேதசாஸ்திரங்களை வெளியிடத் திருவுள்ளம்பற்றியபோது ஹம்ஸரூபத்தை பரிக்ரஹித்தருளினதாக சாஸ்த்ரங்களிலறிகிறோம், * அன்னமாய் நூல் பயந்தான் * என்றும் * அன்னமதாயிருந்து அங்கு அறநூலுரைத்த * என்றும் ஆழ்வார்களுமருளிச் செய்கிறார்கள். சாஸ்த்ரோபதேசத்திற்கு ஹம்ஸமாயிருத்தல் அவசியமாயினபடியாலே சாஸ்திரங்களை யுபதேசித்தவர்களில் தலைவரான எம்பெருமானுரை ஹம்ஸமென்றது பொருத்தமே.

41. ஹம்ஸத்தினுடைய இயல்வைச் சொல்லுமவர்கள் * நபத்தநாதிரதிம் ஹம்ஸ: காதசித் கர்தமாம்பஸி * என்கிறார்கள்; அதாவது ஹம்ஸம் ஒருகாலும் சேற்று நீரில் கால்

பொருந்தாதென்றபடி. அப்படியேயன்றோ எம்பெருமானார்படியும் திருவிருத்தத்தின் முடிவு பாசுரத்தில் "அழுந்தார் பிறப்பாம் பொல்லாவருவினை மாய வன்சேற்றள்ளல் பொய்ந்நிலத்தே என்று இந்த ஸம்ஸாரநிலமே சேற்றுநிலமாகச் சொல்லப்பட்டுள்ளது; இதில் கால்பொருந்தாதவர்களில் தலைவராயிற்று எம்பெருமானார்,

42. திவ்ய தேசங்களை வருணிக்கும்போது ஆழ்வார்கள் அன்னம் மாதர்களின் நடையைப் பின்சென்று நடப்பதாகக் கூறுகிறார்கள்; * பெடையோடன்னம் பெய்வளையார்தம் பின்சென்று நடையோடியலி * என்று திருமங்கையாழ்வார் திருநறையூர்ப்பதிகமொன்றில் கூறியுள்ளது காண்க. ஸ்வாமி தாமும் * அன்னநடைய வணங்கான பிராட்டியினுடைய நடையைப் பின் செல்பவர். (அதாவது) பிராட்டியின் நடையாவது நடத்தை; சேதனர்களைக்குறித்து எம்பெருமானிடத்தில் மன்றாடிப் பேறு பெறுவிப்பதே பிராட்டியினுடைய முக்கியமான நடத்தையாகும். அதை ஸ்வாமி தாமும் அநுஸரிக்கையாவது-தாமும் அப்படியே எம்பெருமானிடத்தில் மன்றாடி இன்றிருக்கும் நம்போல்வார்க்கும்பேறு பெறுவித்ததேலயாம் இவ்விஷயத்தை ஸ்ரீமத் வேதாந்ததேசிகன் ந்யாஸதிலகத்தில் * உக்த்யா தநஞ்ஜய விபீஷண லக்ஷ்யயா தே ப்ரத்யாய்ய லக்ஷ்மணமுநேர் பவதா விதீர்ணம், ச்ருத்வாவரம் * என்ற ச்லோகத்திலும், மணவாளமாமுனிகள் யதிராஜ விம்சதியில் * காலத்ரயேபி..... க்ஷேமஸ் ஸ ஏவ ஹி யதீந்த்ர பவத்ச்ச்ரிதாநாம் * என்ற ச்லோகத்திலும் வெளியிட்டருளினார்கள். அவற்றின் வியாக்கியானங்களிலே விரியவுரைத்தோம். கண்டு கொள்வது; பொதுவாகவே ஆசார்யர்களின் புருஷகாரமில்லாமல் எம்பெருமான் பேறு தரமாட்டானென்பதை * தத்தேரங்கீ நிஜமபி பதம் தேசிகாதேச காங்க்ஷீ * (ந்யாஸதிலகே) என்ற ஸ்ரீஸூக்தியினால் கல்வெட்டாக வருளிச்செய்தார்; எம்பெருமானார்க்கு இது விசேஷ நிரூபகமென்றுணர்க. இங்ஙனமே மற்றும் பலவகையான பொருத்தங்களும் உய்த்துணர்க.

43. இனி "ஸ்ரீமத் பராங்குச பதாம்புஜ ப்ருங்கராஜம்" என்று வண்டாக அருளிச் செய்ததின் பொருத்தங்களை நிரூபிப்போம். வண்டு மதுவ்ரத மென்று பேர் பெற்றிருக்கும், தேன் தவிர வேறொன்றைக் கொள்ளாது என்றபடி, அதுபோல * உளங்கனிந்திருக்குமடியவர் தங்களுள்ளத்துளூறியதேன் * என்றும் * தேனை நன்பாலைக் கன்னலையமுதை * என்றும் * எனக்குத்தேனே, பாலே கன்னலே யமுதே * என்றும் பல விடங்களிலும் தேனாகச் சொல்லப்பட்ட எம்பெருமானையே விரும்பி மற்றொன்றைக் கண்ணெடுத்தும் பாராமல் பகவதனுபவத்தையே விரதமாகக் கொண்டிருந்தவர் எம்பெருமானார்,

44. * வண்டினங்கள் காமரங்களிசைபாடும் * என்று குலசேகராழ்வாரும், யாழினிசை வண்டினங்கள் ஆளம் வைக்கும் * என்று பெரியாழ்வாரும், * வரிவண்டுதேதென வென்றிசை பாடும் * என்று திருமங்கையாழ்வாரும் இப்படி மற்றும் பலரும் பணித்தபடியே யாழிசை போன்ற இசைகளைப் பாடுவதையே இயல்வாகவுடையதாயிருக்கும் வண்டு; ஸ்வாமிதாமும் * யாழினிசை வேதத்தியல் * பண்ணார் பாடலாயிரம் * என்னப்பட்ட திருவாய்மொழி முதலிய திவ்யப்பிரபந்தங்களின் கானத்தையே போதுபோக்காகவுடையராயிருந்தவர் "தமிழ் மறைகளாயிரமும் மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்" 'பண்டருமாறன் பசுந்தமிழானந்தம் பாய்மதமாய் விண்டிட வெங்களிராமானுசமுனிவேழம்" என்றவை காண்க,

45. வண்டு வடமொழியில் சஞ்சரீகமென்று பேர் பெற்றிருக்கும்; ஓரிடத்தில் தடைபிராது; மதுவுள்ளவிடமெங்கும் பறந்து திரியுமது. அதுபோல் ஸ்வாமி தாமும் *ஸ்ரீரங்கம் கரிசைலமஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலௌ ஸ்ரீகூர்மம் புருஷோத்தமஞ்ச பதரீ நாராயணம் நைமிசம், ஸ்ரீமத்த்வாரவதீ ப்ரயாக மதுராயோத்யா கயா புஷ்கரம் ஸாலக்ராம கிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம் முநி ;* என்கிறபடியே * பதியேபரவித்தொழுந் தொண்டர்களில் தலைவராயிருந்தார்.

46. வண்டு எந்த ஸமயத்தில் எங்குச் செல்லவேணுமென்று நினைத்தாலும் தட்டுத் தடங்கலின்றியே புகுந்து ரமிக்கும்; ஸன்னிதியில்; கர்ப்பக்ருஹங்களினுள்ளும் எம்பெருமான் திருமுடிமீதும் தாராளமாகப் புகக்காணுநின்றோம். அதுபோல, * பின்னிட்ட சடையானும் பிரமனுமிந்திரனும் துன்னிட்டுப் புகலரிய *என்னும்படி திருவாசல்களிலே ஸேவா பரரானவர்கள் நிறைந்து தலை நுழைக்கவொண்ணுதபடி நெருக்க, * மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடுநாள் * என்னும்படியவதரித்தருளின எம்பெருமானுர்; கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான எந்த திவ்யதேசங்களிலும் தடையும் சங்கையுமொன்று மின்றிக்கே அதிகாரச் செல்வத்துடனே உள்ளே புகுந்து ஒழிவில் காலமெல்லாமுடனுய் மன்னி வழுவிலா வடிமை செய்து வாழ்ந்தவர் காண்மின்.

47. வண்டு சோலைகளிலேயே சுழலமிடும்; எம்பெருமானுர்தாமும் * ஆராமஞ் சூழ்ந்த வரங்கம் * சிந்து பூ மகிழுந்திருவேங்கடம் * விரையார்பொழில் வேங்கடம் * என்னும்படியாகச் சோலைகள்மிக்க, தலங்களிலேயே சுழலமிட்டவர். இப்படி மற்றும் பல பொருத்தங்களும் காண்க.

48, நாடு நகரமும் நன்கறிய எங்கும் அனுஸந்திக்கப்பட்டு வருகின்ற ஆண்டாள் வாழித் திருநாமத்தில் ''பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னுனாள் வாழியே'' என்றுள்ளது. இதனால் பெரியாழ்வார் திருமகளாரான சூடிக்கொடுத்த நாச்சியார் எம்பெருமானுர்க்குத் திருத்தங்கையாரென்று தெரியவருகின்றது. பெரியாழ்வாருடைய காலத்திற்கும் எம்பெருமானுர் காலத்திற்கும் இடையே எவ்வளவோ வ்யவதாநமுள்ளதென்பதை உலகமறியும். ஆண்டாளுக்குப் பின் ஆயிரக்கணக்கான வருஷங்கள் கடந்தபிறகு அவதரித்தவரான எம்பெருமானுர் அவ்வாண்டாளுக்குத் திருத்தமையனுராக எப்படியாக முடியும் ? என்கிற சங்கை ஸம்ப்ரதாய இதிஹாஸவிசேஷ மறியாதவர்களுக்குத் தோன்றக்கூடியது. இவ்விதிஹாஸ மறிந்தவர்களுக்கு இந்த சங்கை தோன்ற நியாயமில்லை. அவ்விதிஹாஸத்தை இங்குச் சுருக்கமாக வரைகின்றோம். எம்பெருமானுர் திருவரங்கம் பெரிய கோயிலில் உபயவேதாந்த க்ரந்த காலக்ஷேபம் நிர்வஹித்தருளுகிற நாளிலே நாச்சியார் திருமொழி காலக்ஷேபம் நடவாநிற்க, அதில்* நாறுநறும் பொழில் மாலிருஞ் சோலை நம்பிக்கு நான், நூறுதடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து பராவிவைத்தேன், நூறு தடாநிறைந்த அக்கார வடிசில் சொன்னேன், ஏறு திருவுடையான் இன்று வந்திவை கொள்ளுங் கொலோ* [9—6] என்கிற பாசுரத்தின் பொருளை விவரித்தருளுகையில் '' திருமாலிருஞ் சோலையழகர்க்கு நூறு தடாநிறைந்த வெண்ணெயும் அக்காரவடிசிலும் ஸமர்ப்பிக்க ஆண்டாள் மநோரதித்துப் பாசுரம் பாடினுள் : அதை நாம் அநுஷ்டாநபர்யவஸாயியாக நிறைவேற்றிவைப்போம்'' என்று கோஷ்டியிலேயருளிச் செய்து உடனே ஸகல சிஷ்யர்களையும் கூட்டிக்கொண்டு மதுரைக் கெழுந்தருளி அங்கே ஸம்பாரங்களைச் சேகரித்துக் கொண்டு திருமாலிருஞ்

சோலைக்கெழுந்தருளிப் பாசுரப்படியே நிறைவேற்றிவைத்து அழகருடைய பேரருளைப் பெற்று மகிழ்ந்து, அங்கு நின்றும் ஸ்ரீ வில்லிபுத்தூரிலே ஆண்டாளையும் மங்களாசாஸனஞ் செய்துவருவதாகத் திருவுள்ளம்பற்றி அங்கேறவெழுந்தருளி ஸந்நிதிக்குள் செல்லுகையில் ஆண்டாள் ஆனந்தம் பூரித்து அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து எதிர்கொண்டு வந்து ''எம் அண்ணரோ நீர்'' என்று சோதிவாய் திறந்தருளிச் செய்து ஆரத்தழுவியருளினாள். தான் மாநோரதித்து வாசிகமாகச் சொல்லி வைத்ததை ஸ்வாமி ஸாக்ஷாத்தாக நிறைவேற்றிவைத்தபடியினால், தங்கை மநோரதித்ததைத் தமையனார் நிறைவேற்றிவைக்கிற கணக்கிலே யானதாகக்கொண்டு ஆண்டாள் இங்ஙனம் கூறியது மிகவும் பொருத்தமானது. அன்று முதலாக எம்பெருமானார்க்கு அண்ணனென்கிற ப்ரஸித்தியும் ஆண்டாளுக்கு * பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாளென்கிற ப்ரஸித்தியுமுண்டாயிற்று.

49. ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த யதிராஜ ஸப்ததியில் முதல் ஒன்பது ச்லோகங்கள் குருபரம்பராநுபவத்தில் சென்றன. 1. பெரிய பெருமாள், 2. பெரிய பிராட்டியார், 3. ஸேனை முதலியார், 4. நம்மாழ்வார், 5 ஸ்ரீமந்நாதமுனிகள், 6. உய்யக்கொண்டார் 7. மணக்கால்நம்பி, 8. ஆளவந்தார், 9. பெரியநம்பி,—ஆக இப்படி குருபரம்பராநுபவம் செய்து தலைக்கட்டிய பின் * ப்ரணுமம் லக்ஷ்மணமுனி; என்கிற ச்லோகம் முதலாக எம்பெருமானாருடைய குணாநுபவத்திலே இறங்கியுள்ளார். மேற்குறித்த ஆரம்ப ச்லோகத்தில் லக்ஷ்மண முநி: என்று ஸ்வாமியின் திருநாமத்தை வ்யபதேசித்தபடியினால் ஸ்வாமிக்கு அமைந்த ராமாநுஜர் என்னுந் திருநாமம், தசரதாத்மஜனான ஸ்ரீராமனுடைய தம்பியாகிய இளைய பெருமாளைக் குறிக்கொண்டதாமென்று விளக்கப்பட்டதாயிற்று. ராமாநுஜ னென்கிற திருநாமம், செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா!' என்னப்பட்ட நம்பிமூத்தபிரானென்னும் பலராமனுடைய தம்பியான கண்ணனையும் சொல்லக்கடவதென்பது முகுந்த மாலையில் * ஹேராமாநுஜ ஹே ஜகத்த்ரயகுரோ ஹேபுண்டரீகாக்ஷ * என்கிற ஸுப்ரஸித்தமான ச்லோகத்தினால் அனைவரு மறிந்ததேயாம். ஆகவே ஸ்வாமிக்கு அமைந்த ராமாநுஜ ரென்னுந் திருநாமம் கண்ண பிரானைக் குறிக்கொண்டதாகவும் கொள்வதற்கு இடமிருப்பதால், கண்ணபிரானுக்கும் ஸ்ரீராமாநுஜர்க்குமுள்ள ஒற்றுமையைக் கீழே நாம் பதினாறு வகையாக விவரித்து நிரூபித்திருக்கின்றோம். அது சரித்திரப் போக்கில் ஸ்வாபதேசார்ந்த முறையில் நிரூபிக்கப்பட்ட ஸாம்யம். வேதாந்த தேசிகன் யதிராஜ ஸப்ததியில் சப்த ச்லேஷ வகையினால் நிரூபித்தருளின ஸாம்யம் ஈண்டு விவரிக்கப்படுகிறது. (அந்த ச்லோகம் வருமாறு:—)

50. ''சமிதோதய சங்கராதி கர்வ : ஸ்வபலாத் உத்த்ருதயாதவப்ரகாச ;
அவரோபிதவாந் ச்ருதேரபார்த்தாந் நநு ராமாவரஜஸ் ஸ ஏஷ பூய ;

இந்த ச்லோகத்தில் மூன்று வகைகளினால் கண்ணபிரானுக்கும் எம்பெருமானார்க்கும் ஸாம்யம், வடமொழி வல்லுநர்க்கு மிகவும் ரஸிக்கக்கூடிய ச்லேஷாலங்கார மர்யாதையினால் [சிலேடை யணியில்) அருளிச்செய்யப்பட்டுள்ளது. பல பொருள்படச் சொல்லுவது ச்லேஷம் (சிலேடை) எனப்படும். அது அபங்க ச்லேஷமென்றும் ஸபங்க ச்லேஷமென்றும் இருவகைப்படும். பதங்களை யொடித்துப் பொருள்கொள்ள வேண்டாமல் நாநார்த்த பதங்களையிட்டுப் பல பொருள்களைப் பெறுவிப்பதானது அபங்க ச்லேஷ மெனப்படும். அப்படியல்லாமல், பதங்களை யொடித்துப் பல பொருள்கொள்ளுமாறு ப்ரயோகம் செய்வதானது ஸபங்க ச்லேஷ எனப்படும். இப்போது நாமெடுத்துக்கொண்ட * சமிதோதய * என்னும் யதிராஜ ஸப்ததி ச்லோக ரத்நத்தில் முதலிரண்டு பாதங்களில் அபங்க ச்லேஷம். மூன்றுவது பாதத்தில் மாத்திரம் ஸபங்க ச்லேஷம்.

இனி ச்லோகத்தின் கருத்து விவரிக்கப்படுகிறது,

51. (1. சமிதோதய சங்கராதி கர்வ :) இது கண்ணனுக்கும் உடையவர்க்கும் பொதுவான விசேஷணம்] 'சங்கரன் முதலானோருடைய செருக்கை யடக்கினவர்' என்பது இதன் பொருள், கண்ணபிரான்பரமாகப் பொருள் கொள்ளும்போது சங்கரன் என்பதற்குச் சிவபிரானென்று அர்த்தம். ஆதிபதத்தினால் அப்பிரானைச்சேர்ந்த கார்த்திகையான் கரிமுகத்தான் முதலானோரை (ஸுப்ரஹ்மண்ய விநாயகாதிகளைக்) கொள்வது. கண்ணபிரான் பாணாஸுர யுத்தத்தில் சங்கரன் முதலானோருடைய செருக்கையடக்கினது இதிஹாஸ புராண ப்ரஸித்தம். உடையவர் * சங்கர பாற்கர யாதவபாட்ட ப்ரபாகரர் தங்கள் மதஞ் சாய்வுற * என்றும் *கா சங்கா சங்கராதே: * என்றும் சொல்லுகிறபடியே, சங்கரகுரு ப்ரப்ருதிகளான புறமதத்தவர்களின் செருக்கைப் போக்கினவர் என்பது சரித்ர ப்ரஸித்தம், ஆகவே இந்த விசேஷணம் கண்ணனுக்கும் உடையவர்க்கும் ஸாம்யத்தை நிரூபித்ததாயிற்று. கண்ணபிரான் சங்கராதிகளின் செருக்கை யடக்கின வரலாறு இங்குச் சுருங்க எழுதப்படுகின்றது. பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்த பாணாஸுர னென்பான் ஒருகால் நடராஜனான சிவபெருமானுடைய நடனத்திற்கும் பொருத்தமாகத் தாளம் போட்டனன் ; அதனால் மிக்க மகிழ்ச்சிகொண்ட சிவபெருமான் அந்த ஸந்தோஷாதிசயத்தினால் அந்த பாணாஸுரனுக்கு ஆயிரங் கைகளை வரப்ரஸாதமாகத் தந்து, தானும் தன் பரிவாரங்களும் அவனது பட்டணத்தைக் காவல் செய்துகொண்டிருக்கும்படியான அநுக்ரஹமும் செய்தருளினன். அந்தப் பாணாஸுரனுக்கு உஷையென்று ஒரு மகள் இருந்தாள் அவள் ஒரு நாள் ஒரு பரமஸுந்தரனான புருஷனோடு தான் கூடியிருந்ததாகக் கனாக் கண்டு, தப் உயிர்த் தோழியான சித்ரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்தாள். அவள் உலகிலுள்ள பல ஸுந்தர புருஷர்களின் வடிவங்களைச் சித்திரத்தில் எழுதிக் காட்ட, க்ருஷ்ணனுடைய பௌத்ரனும் ப்ரத்யும்நனது புத்ரனுமாகிய அநிருத்தனை தன்னோடு கூடியிருந்தனனாக உஷை சுட்டிக் காட்டி, அவனைப் பெறுவதற்கு உபாயஞ் செய்யவேண்டுமென்று அத்தோழியை வேண்டினாள். அவள் தன் யோகவித்தை மஹிமையினால் த்வாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக் கொண்டு வந்து அந்தப்புரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை யநுபவித்து வந்தாள். இச்செய்தியைக் காவலாளரா லறிந்த அந்தப் பாணன் தன் சேனையுடன் அநிருத்தனை யெதிர்த்து மாயையினால் பொருது நாகாஸ்த்ரத்தினால் கட்டிப் போட்டிருந்தான். த்வாரகையிலே அநிருத்தனைக் காணாமல் யாதவர்க ளெல்லாருங் கலங்கி யிருந்தபோது; நாரதமுனிவனால் செய்தியுணரப் பெற்ற ஸ்ரீ க்ருஷ்ண பகவான்; கருடாரூடனாய்ப் பலராமன் முதலானோரோடுகூட பாணபுரமாகிய சோணிதபுரத்திற் கெழுந்தருளும்போதே, அங்கு அருகில் காவல் காத்துக்கொண்டிருந்த சிவபிரானது ப்ரமத கணங்கள் எதிர்த்துவர. அவர்களையெல்லா மழித்து, பின்பு சிவபெருமானாலேவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளுமுள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும் பொருட்டுப் போர் புரிய, அதனையும் துரத்தி. பாணாஸுரனது கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த சிவபிரானது அநுசரர்களான அக்நிதேவர்கள் ஐவரையும் நாசஞ்செய்து, பாணாஸுரனோடு போர் செய்யத் தொடங்குகையில், அவனுக்குப் பக்கபலமாக சிவபெருமானும் ஸுப்ரஹ்மண்யன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப் போராட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்த்ரத்தை ப்ரயோகித்துச் சிவன் ஒன்றுஞ் செய்யமாட்டாமல் கொட்டாவி விட்டுக்கொண்டு சோர்வடைந்து போம்படி செய்து, ஸுப்ரஹ்மண்யனையும் கணபதியையும் ஹுங்காரங்களால் ஓறுத்து ஒட்டி. பின்னர் சக்ராயுதத்தை யெடுத்து ப்ரயோகித்து அப் பாணனது ஆயிரந் தோள்களையும் தாரை தாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையும் சிதைப்பதாக விருக்கையில், பரமசிவன் அருகில் வந்து வணங்கிப் பலவாறு ப்ரார்த்தித்ததனால் சிவபஜனஞ் செய்தார்க்குப் பலன் கைமேல் கண்டதாக இருக்கட்டுமென்றெண்ணிய கண்ண

பிரான் நான்கு கைகளோடும் உயிரோடும் அவனை விட்டருளினன் என்பதாம், எம்பெருமானார் சங்கராதி கர்வசமனம் பண்ணினது, ஸ்ரீ பாஷ்யாதி க்ரந்த ரசனையினாலும், அத்வைதி ப்ரப்ருதிகளை வாதப்போரில் வென்று ஆட்படுத்திக்கொண்டதனாலும் என்றுணர்க. இவ்விஷயம் மேலே மூன்றாவது பாதத்தின் விவரணத்தினாலும் விளங்கும்.

52. (2, ஸ்வபலாத் உத்த்ருதயாதவப்ரகாச:) கண்ணபிரான்பரமான அர்த்தத்தில், யாதவர்களின் ப்ரகாசம் யயாதி சாபத்தினால் மங்கிக் கிடக்கையில், ''கோபாலோ யாதவம் வம்சம் மக்நமப்யுத்தரிஷ்யதி'' என்கிறபடியே அந்த ப்ரகாசத்தைத் தனது வலிமையினால் புநருத்தாரம் செய்தவன் என்று கொள்ளக்கடவது. யதுகுலத்திலே பிறந்து யாதவர்களை விளக்கமுறச் செய்தருளினவன் கண்ணபிரான் என்க. உடையவர்பரமான அர்த்தத்தில், யாதவப்ரகாச' என்று முழுச் சொல்லாகக்கொண்டு, அப்பெயர்பூண்ட மாயாவாதி குருவைத் தம்முடைய க்ருபாபலத்தினால் உத்தரிப்பித்தவர் என்று கொள்க, முதலில் தமக்கு உபாத்யாயராயிருந்த யாதவப்ரகாசரையும் தமக்கு அடிமைப்படுத்திக்கொள்ளும்படியான ப்ரபாவமுடையவர் எம்பெருமானார் என்க. இவ்வரலாறு உடையவர் சரிதையில் விரிவாகக் காணத்தக்கது.

53. (3, அவரோபிதவாந் ச்ருதே: அபார்த்தாந்) 'அபார்த்தாந் ச்ருதே; அவரோபிதவாந்' என்று அந்வயம். இதில் ஸபங்க ச்லேஷமுள்ளது. அபார்த்தாந் என்னும் பதம், (அ பார்த்தாந்) என்றும் (அப அர்த்தாந்) என்றும் பிரியும் பார்த்தனென்று அர்ஜுநனைச் சொல்லி, பார்த்தரல்லாத (அர்ஜுந விரோதிகளான) துர்யோதநாதிகளை அபார்த்தர்களென்று சொல்லுவதாகக் கண்ணன்பரமான அர்த்தத்தில் கொள்ளவேண்டும். ச்ருதியென்று கீர்த்திக்கும் பெயர்; வேதத்திற்கும் பெயர். கண்ணபிரான் அபார்த்தர்களான துர்யோதநாதிகளைக் கீர்த்தியிலிருந்து கீழேயிறக்கிவிட்டான்: பாண்டவ பக்ஷபாதியாயிருந்து * மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர்குலைய நூற்றுவரும் பட்டழியச் செய்து அவர்களைக் கீர்த்தியிழந்தவர்களாகச் செய்தானென்றபடி, ஸ்வாமி ராமாநுஜரோ வென்னில்: (ச்ருதே: அபார்த்தாந் அவரோபிதவாந்) இதர மதஸ்தர்கள் வேதங்களுக்குச் செய்த அபார்த்தங்களை ஸமீசீநார்த்த ப்ரதர்சனத்தினால் நிரஸித்தருளினவர். ஆனதுபற்றியே * சமிதோதய சங்கராதி கர்வ சாக முதல் பாதத்தில் கூறப்பட்டாரென்று உணர்க.

54. இனி, ச்ருதியின் அபார்த்தங்களை எம்பெருமானார் நிரஸித்தருளிய விதம் விவரிக்கப் படுகிறது. ''அவரோபிதவாந் ச்ருதேரபார்த்தாந்'' என்கிற மூன்றாவது பாதத்தினால் ஸ்ரீராமாநுஜர் வேதத்திற்குப் பிறர் கூறின அபார்த்தங்களைத் தள்ளி உண்மைப் பொருள்களையுரைத்தருளினதாகத் தெரிவிக்கப்படுகிறது. 'எந்த ச்ருதி வாக்யத்திற்கு எவ்விதமாகப் பிறர் ஏலாத பொருளைக் கூறினர்? அங்கு எம்பெருமானார்எவ்விதமான அர்த்தங் கூறியருளினர் என்பதை தெரிவிக்க, ஒன்று ஒரு விஷயத்தை யெடுத்துக்கொண்டு விவரிக்கின்றோம்;—

உபநிஷத்துக்களில் சில வாக்யங்களில் ஒரு தத்வமே உள்ளதாகவும் பல தத்வங்கள் இல்லை யென்பதாகவும் பேசப்பட்டுள்ளது *நேஹ நாநாஸ்தி கிஞ்சந* என்பது ஒரு ச்ருதி வாக்யம் 'ந இஹ நாநா அஸ்தி கிஞ்சந' என்று பதம் பிரியும். இஹ நாநா கிஞ்சந நாஸ்தி இவ்வுலகில் பலவென்றுசொல்லக்கூடியது எதுவு மில்லை என்பது இந்த ச்ருதி வாக்யத்தின் பொருள். ''ஏகமேவ அத்விதீயம்'' என்கிற மற்றொரு ச்ருதி வாக்யமும் மேற்கூறிய பொருளை (அதாவது; பல தத்வங்க ளிடையா; ஒரே தத்வந்தா னுள்ளது என்னும் பொருளை) த் திடப்படுத்தியுள்ளது. இப்படி பல வாக்யங்கள் உபநிஷத்துக்களில் உள்ளனவென்று வைத்துக்கொள்வோம்,

55. அந்த உபநிஷத்துக்களிலேயே மற்றுஞ் சில விடங்களில் பல தத்வங்கள் உள்ளன வென்று காட்டுகின்ற வாக்யங்களையும் காணுநின்றோம்; அப்படிப்பட்ட வாக்யங்களில் சிலவற்றை யெடுத்துக் காட்டுவோம்:- (1) *க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநௌ ஈசதே தேவ ஏக:* இது ஒரு ச்ருதி வாக்யம். இதனால், அசேதனப் பொருளும் சேதனப் பொருளும் இவ்விரண்டுக்கும் இறைவனை ஒரு பகவானும் ஆக மூன்று தத்துவங்களுள்ளனவாகச் சொல்லப்படுகிறது. (2) * ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜா வீச நீசௌ *-இதுவும் ஒரு ச்ருதி வாக்யம்; இதனாலும் ஒரே தத்வ மல்ல, வெவ்வேறுபட்ட தத்வங்களுண்டென்பது காட்டப்படுகிறது. (3)

*த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே, தயோரந்ய: பிப்பலம் ஸ்வாது அத்தி அநச்நந்நந்யோஅபிசாகசீதி என்கிற இதுவும் அப்படிப்பட்ட மற்றொரு ச்ருதிவாக்யம். இரண்டு பக்ஷிகள் ஒன்றோடொன்று இணங்கிக்கொண்டு ஒரு வ்ருக்ஷத்தில் (அசேதநமான சரீரத்தில்) அணைந்துகிடக்கின்றன வென்றும், அவ்விரண்டு பறவைகளுள் ஒரு பறவையானது(ஜீவாத்மா) புண்ய பாபரூப கர்ம பலன்களை இனிதாக உண்டு களிக்கின்றதென்றும், மற்றொரு பறவையானது (பரமாத்மா) ஒன்றும் உண்ணாமல் மிக விளங்குகின்றதென்றும் இந்த ச்ருதி வாக்யத்தினால் கூறப்படுகின்றது. இதனால் சேதந-அசேதந ஈச்வரர்களாகிற மூன்று தத்வங்களுள்ளனவென்பது தெளிவாக விளங்கிற்று. இப்படிப்பட்ட ச்ருதி வாக்யங்களும் உபநிஷத்துக்களில் பலவுள்ளன வென்று வைத்துக்கொள்வோம்.

56. பல தத்துவங்கள் கிடையா; ஒரே தத்வந்தானுள்ளதென்று கூறுவதாக முதலில் எடுத்துக் காட்டப்பட்ட ச்ருதிவாக்யங்களானவை அபேத ச்ருதி என வழங்கப்பெறும்; அத்வைத ச்ருதி யென்பதும் மறு பெயர். பிறகு, பல தத்வங்களுள்ளன வென்று கூறுவதாக எடுத்துக் காட்டப்பட்ட ச்ருதிவாக்யங்களானவை பேத ச்ருதி அல்லது த்வைத ச்ருதியென்று வழங்கப்பெறும்; இவை ஒன்றோடொன்று முரண்படுகின்ற வார்த்தைகளாக இருக்கின்றன. 'பல தத்வங்கள் கிடையா; ஒன்றேதான்' என்று ஓரிடத்திற் சொல்லுவதும், பல தத்வங்களுண்டென்று பிறிதோரிடத்தில் விவரித்துக் காட்டிக் கூறுவதும் பரஸ்பரம் முரண்பட்டதே யன்றோ? ஒன்றுதான் தத்வம் என்று சொல்லிவிட்டால், பல தத்வங்களுள்ளனவாகச் சொல்வது கூடாது; பல தத்வங்கள் உண்டென்றால் ஒன்றே தத்வ மென்பது பொருந்தாது; ஆகவே முரண்பாடு மூதலிக்கப்பட்டதாயிற்று. இது பொருந்துமா?

57. ''வேதநூல் ஓதுகின்றதுண்மையல்லதில்லை மற்றுரைக்கிலே'' என்ற திருமழிசையாழ்வார் திருவாக்கின்படி யதார்த்தமே யுரைக்கவல்ல உபநிஷத்துக்கள் பரஸ்பர விருத்தமாகவோ அஸங்கதமாகவோ சொல்லமாட்டா வாதலால், மேலே யெடுத்துக் காட்டின ச்ருதி வாக்யங்களை முரண்பாடு சிறிது மின்றியே ஸங்கதமாகப் பொருத்த விடுகிற வழி என்ன? என்பது ஆராயப்படவேண்டும். ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள், ஒரு தத்துவமே யுள்ளதென்று ஓதுகிற அத்வைத ச்ருதிகளாக நாம் மேலே எடுத்துக்காட்டிய அபேத ச்ருதிகளை முக்யமாகக் கொண்டு ஒன்றேதான் தத்வமென்று நிர்வஹித்தார்கள். பல தத்வங்களுண்டென்றோதுகின்ற த்வைத ச்ருதிகளாக நாம் மேலே எடுத்துக் காட்டிய பேத ச்ருதிகளை ஒருவாறு ஔபசாரிகமாக நிர்வஹிக்கலாமென்றும் அவர்கள் கருதினார்கள். சேதனப் பொருள்களும் அசேதநப் பொருள்களுமுள்ளனவாகத் தோன்றுவது மாயையின் தோற்றமே யாதலால், அப்படிப்பட்ட தோற்றத்தை நோக்காகக் கொண்டு பேத ச்ருதிகள் அவதரித்ததாக நிர்வஹித்துவிடலா மென்பது இவ்வத்வைதிகளின் கருத்து. ஆகவே த்வைத ச்ருதிகளைத் தள்ளி அத்வைத ச்ருதிகளையே முக்யமாகக் கொண்ட

படியால். இவர்கள் அத்வைதிகளென்று வழங்கப்படுகிறார்கள். பேதம் மாயை தோற்றம்
என்கிறார்களாதலால் அவர்கள் மாயாவாதிக ளென்றும் வழங்கப்படுகிறார்கள். ஸ்ரீமத் ஆனந்த
தீர்த்த ஸ்வமமிகள் த்வைத ச்ருதிகளான பேத ச்ருதிகளை முக்கியமாகக்கொண்டு அத்வைத
மச்ருதிகளை ஔபசாரிகமாக நிர்வஹிக்கலாமென்று கருதுகிறார்களாதலால், அவர்கள்
மத்வாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்கள்) த்வைதிகள் என வழங்கப்படுகிறார்கள்.

58 ஆக மேற்கூறிய (அத்வைதம் த்வைதம் என்கிற) இரண்டு ஸம்ப்ரதாயங்களிலும் ஒரு
வகையான உபநிஷத் வாக்கியங்களே ஒதுக்கப்பட்டு ஒருவகையான உபநிஷத் வாக்கியங்களே
முக்யமாகக் கொள்ளப்படுகின்றன வென்பது தேறுகின்றது சித்து அசித்து ஈச்வரன் என மூன்று
தத்வங்கள் ஸத்யமாக உள்ளன வென்கிற அர்த்தம் ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகட்கும் அவரைச்
சார்ந்தவர்கட்கும் உடன்பாடன்று. ஒரே தத்வந்தா னுள்ளது என்கிற அர்த்தம் ஸ்ரீமத்வாசார்ய
ஸ்வாமிகட்கும் அவரைச் சார்ந்தவர்சட்கும் உடன்பாடன்று

59 அத்வைதிகள் சில ச்ருதி வாக்யங்களைத் தள்ளவும். த்வைதிகள் சில ச்ருதி வாக்யங்
களைத்தள்ளவும் நேர்ந்திருக்கின்ற தென்பதை இதுவரையில் விவரித்தோமாகும். இனி, ஒரு
ச்ருதி வாக்யத்தையும் தள்ளாமல் உபநிஷத் வாக்யங்க ளெல்லாவற்றையுமே ஸமரஸப்படுத்தி
ஒன்றையு மொதுக்காமல் மிகவும் பொருத்தமாகவே நிர்வஹித்தருளினவர்கள் நம் பூருவாசாரி
யர்கள். அவர்களில் தலைவர் பகவத் ராமாநுஜர் ஒரே தத்வந்தா "னுள்ளது என்று தெரிவிக்கிற
ச்ருதி வாக்யங்களையும், பல தத்வங்க ளுண்டென்று தெரிவிக்கின்ற ச்ருதி வாக்யங்களையும் எப்படி
பொருத்தவிட முடியு மென்னில்: நம்பேராசிரியர் எப்படிப் பொருந்த விட்டிருக்கிறா ரென்பது
இனி உபபாதிக்கப்படுகிறது. உலகத்தில் ஒரு வஸ்துவைப் பல வென்றும் ஒன்றே என்றும்
சொல்வதற்குப் பொருத்தமுண்டு. உதாஹரணமாக ஒரு கடிகாரத்தை யெடுத்துக் கொள்வோம்
அஃது ஒன்றா பலவா? என்று கேட்டால், கையில் ஒரு கடிகாரமே உள்ளதாகையால் ஒன்றே
என்று சொல்வோம். ஆனால் அதை நாம் ஊன்றிப் பார்க்குங்கால், அதில் பலபல வஸ்துக்கள்
அவயவங்களாக (உறுப்புகளாக)ச் சேர்ந்திருப்பது புலப்படாமற்போகாது பல அவயவங்களோடு
கூடிய அவயவியான வஸ்து ஒன்றே என்று ஏற்படுமேயல்லாது ஒரு வஸ்துவுக்குமேல் வேறொரு
வஸ்துவே இதில் கிடையாதென்று சொல்வதாக ஒருகாலும் ஏற்படாது. இப்படி கடிகாரமென்கின்
ஒரு வஸ்துவேயல்ல: உலகிற் காணும் எந்த வஸ்துவை யெடுத்துக்கொண்டு பார்த்தாலும்
இப்படி ஒரு விதத்தில் ஐக்யமும் மற்றொருவிதத்தில் அநேகத்வமும் தோன்றியே தீரும் படுக்கை
தலையணை. வண்டி, வீடு முதலிய ஒவ்வொரு வஸ்துவும் ஸ்தூல த்ருஷ்டியில் ஒரே வஸ்துவாகவும்
உறுப்புக்களை உற்றுக் காணுமிடத்துப் பல வஸ்துக்களாகவும் கொள்ளப்படுவது அநுபவஸித்தம்
நம்மையே யெடுத்துக்கொள்வோம். 'ராமாநுஜனென்பவன் ஒருவன்' என்று சொல்லுகிறோம்
'செவி வாய் கண் மூக்கு முதலான பல உறுப்புக்களோடு கூடிய ஆத்மாவாகிய அந்த வ்யக்
'ஒருவன்' என்று சொன்னதாகத் தேறமாட்டாதன்றோ? இன்னமு மொன்று பாருங்கள்
கராமாநுஜன் சிவப்பாயிருக்கிறான்' என்றும், 'ராமாநுஜன் மேதாவியாயிருக்கிறான்' என்றும்
வழங்கி வருகிறோம் இவ்விரண்டு வார்த்தைகளிலும் 'ராமாநுஜன்' என்கிற சொல் உள்ளது.
சிவப்பாயிருக்கிறா னென்னும்போது ராமாநுஜ னென்கிற சொல்லானது சரீரத்தை நோக்கியது
மேதாவியா யிருக்கிறானென்னும்போது அந்தச் சொல் ஆத்மாவைநோக்கியது ஏன்?சிவப்புநிறம்
சரீரத்திற்கு ஏற்குமேயல்லாது, ஆத்மாவிற்கு ஏலாது. மேதாவித்வம் (அதாவது அறிவுடைமை)

ஆத்மாவுக்கு ஏற்குமேயல்லது, சரீரத்திற்கு ஏலாது. ஆகவே ஒரே பதம் சில ஸமயங்களில் ஆத்மாவைக் குறிப்பதாயும் சில ஸமயங்களில் உறுப்பைக் குறிப்பதாயும் தேறுகின்ற தென்பது தெற்றெனவிளங்கிற்று.

60. இனி, நாம் முன்னே காட்டிய பேத ச்ருதிகளையும் அபேத ச்ருதிகளையு மெடுத்துக் கொள்வோம். சித்து அசித்து ஈச்வரனென மூன்று தத்வங்க ளுள்ளனவாகச் சொல்லுகிற ச்ருதி வாக்யங்கள் (பேத ச்ருதிகளானவை). உண்மையாக அப்படிப்பட்ட மூன்று பொருள்களிருப்பன வாகச் சொல்லுகின்றன வாதலால் பொருந்தும். ஒன்றேயுள்ளது என்று சொல்லுகிற ச்ருதி வாக்யங்கள் (அபேத ச்ருதிகளானவை). சேதந அசேதநப் பொருள்களை சரீரமாகக் கொண்ட பரம்பொருள் ஒன்றே என்ற உண்மையைக் காட்டுகின்றனவாதலால் இவையும் பொருந்தும் இப்படி ஸமந்வயப்படுத்திக் காட்டுவதற்குத் துணை புரியும் ச்ருதி வாக்யங்கள், 'யஸ்ய ப்ருதிவீ சரீரம் ... யஸ்ய ஆத்மா சரீரம்' இத்யாதியாக உள்ளவைகளாம். சரீர சரீரிபாவத்தை விளக்கவல்ல வாக்யங்களாகும். பேதத்தையும் அபேதத்தையும் பொருந்த விடுகிற வாக்யங் களாதலால் கடக ச்ருதி யென்று வழங்கப்பெறுமிவை. இப்படிப்பட்ட ச்ருதி வாக்யங்களில் த்வைதிகளும் அத்வைதிகளும் கண் செலுத்தாமையினாலேயே, அவர்கள் ஸகல ச்ருதி வாக்யங் களையும் ஸமரஸப்படுத்த அவகாச மில்லை யாயிற்று.

61. நம்முடைய ஸம்ப்ரதாயத்திற்கு இந்த யுகாதியில் ப்ரதம ப்ரவர்த்தகரான நம்மாழ் வார் தமது திருவாய்மொழியில் 'உடல்மிசை யுயிரெனக் கரந்தெங்கும்பரந்துளன்' என்கிற அரு மருந்தன்ன ஸ்ரீஸூக்தியினால் சரீராத்மபாவத்தை நிதியர்கக் காட்டி யருளினபடியால் ஸ்ரீமந் நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் முதலான நம் ஆசார்ய சிகாமணிகள் அந்தத் திவ்ய ஸ்ரீஸூக்தியையே பின்பற்றி ஸகல ச்ருதி வாக்யங்களையும் ஸமரஸமாக நிர்வஹிக்க வல்லவர்களா யினர். அப்படிப்பட்ட ஆசார்யர்களில் தலைவரான ஸ்வாமி ராமாநுஜரைப் பற்றி; அவரோப்பி தவாந் ச்ருதேரபார்த்தாந்' என்று கூறியது மிகப் பொருத்தமானதென்று உணரத்தக்கது. ஆக இவ்வளவும் விசிஷ்டாத்வைதக் கொள்கையை விளக்கமாக விவரித்தோமானோம். இவ்வர்த்தங் களையெல்லாம் ஸாரமாகவும் சுருக்கமாகவும் நெஞ்சிற் பதியவைத்துக்கொள்ள ஸ்ரீ வேதாந்த தேசிகன் தாமே ஸங்கல்பஸூர் யோதயத்தில் அருளிச்செய்த ச்லோகரத்ந மொன்றுமுண்டு: அதைக்கண்டபாடம் செய்வது நலமென்று கருதிக் கீழே குறிப்பிடுகின்றோம். ''மிதோ பேதம் தத்வேஷ் வபிலபதி பேதச்ருதிரதோ விசிஷ்டைக்யாத் ஐக்யச்ருதி ரபி ச ஸ்ார்த்தா பகவதி, இமாவர்த்தௌ கோப்தும் நிகிலஜகதந்தர் யமயிதா நிரீசே லக்ஷ்மீச: ச்ருதிபிரபராபி;ப்ரணிததே என்பதாமது.

62. பகவத்ராமாநுஜ ஸித்தாந்தத்திற்கு சரீராத்மபாவமே உயிரானதென்றும், அதைத் திடமாகத் தெரிந்துகொள்ளப்பெறில் எந்த மதாந்தரஸ்தர்களையும் எளிதில் வென்று விடலாமென்றும் ஸ்ரீ தேசிகன் தாமே ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஒரு ச்லோகரத்ந மருளி திறாளள்யுஅ: :ர்தும்வுண்ட பாடஞ்செய்துகொள்ளத் தக்க தென்று கீழே குறிப்பிடலாகிறது-

"யத்யேதம் யதிஸார்வபௌமகதிதம் வித்யாத் அவித்யாதம:-
ப்ரத்யூஷ ப்ரதிதந்த்ரமந்திமயுகே கச்சித் விபச்சித்தம:
தத்ரைகத்ர ஜடித்யுபைதி விலயம் தத்தந்மதஸ்தாபநா
ஹேவாகப்ரதமாந ஹைதுககதாகல்லோல கோலாஹல:" என்பதாம்.

இந்த ச்லோகத்தின் கருத்தாவது – அகவிருள் நீங்குவதற்கு ஸுப்ரபாத காலம் போன்றதும் எம்பெருமானாராலே விரிவாக நிருபிக்கப்பட்டதுமான சரீராத்மபாவமாகிற இந்த ப்ரதிதந்த்ரத்தை இந்த யுகத்தில் யாவனொருவன் நன்கு தெரிந்துகொள்ளப்பெறுகிறானோ அப்படிப்பட்ட ஒரு வித்வானுடைய முன்னிலையில் மதாந்தரஸ்தர்கள் எத்தனைபேர் திரண்டு எவ்வளவு அட்டஹாஸங்கள் செய்தாலும் அவை ஒரு நொடிப்பொழுதில் தொலைந்திடுமென்பதாம். மற்றுமுள்ள ஸித்தாந்திகள் ஒருவருமிசையாதே தன்னுடைய ஸித்தாந்தத்திற்கே அஸாதாரணமான அர்த்தம் ப்ரதிதந்த்ரமெனப்படும். எம்பெருமானார் தர்சனத்திற்கே அஸாதாரணமுமாய் ப்ரதாநமுமான அர்த்தம்—சேதநாசேதநங்களுக்கு ஈச்வரனுக்குமுண்டான சரீராத்மத்வம். இதுதன்னை உள்ளபடி தெரிந்துகொள்ளப் பெற்ற பாக்யசாலிகளுக்கு எந்த வேதாந்த வாக்யமும் எளிதாகப் பொருந்திவிடும். அஸங்கதார்த்தமென்றோ ஔபசாரிகார்த்தமென்றோ துக்கவேண்டியதான வேதாந்தவாக்கியம் எதுவுமேயிராது. இவ்வொரு விஷயத்தைக்கொண்டே ந்த ப்ரதிபக்ஷிகளையும் வென்றுவிடலாமென்றதாயிற்று. ... ... ... ...

இவ்விஷயத்தை நாம் ஸம்ஸ்க்ருதம், ஹிந்தி, தெலுங்கு, தமிழ் ஆகிய நான்கு பாஷைகளிலும் எழுதி அச்சிட்டிருக்கிறோம். எம்பெருமானார் தரிசனத்தைப் பற்றி ஆங்காங்கு உபந்யஸிக்க விரும்புமவர்கள் தாம் தாம் பேருதவியடைந்து வருவதாகத் தெரிவித்து வருகிறார்கள். விசிஷ்டாத்வைத சந்த்ரிகா என்கிற வடமொழி நூல் அதிக விஸ்தரமும் அதிக ஸம்க்ஷேபமுமின்றிக்கே மத்யஸ்தமாயிருக்கும். அது தேவநாகரலிபியில் அச்சிடப்பட்டுள்ளது. விலை இரண்டே ரூபாய். பிங்களவத்ஸர மங்கள வெளியீடுகள் இன்னமும் வெளிவரும்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ. காஞ்சி ப்ரதிவாதிபயங்கரம் மஹாவித்வான்

**அண்ணங்கராசார்யர்**

எழுதிய

எம்பெருமானார் பெருமையநுபவம் முற்றுப்பெற்றது.

ஸ்ரீரஸ்து

# மதுராந்தக மித்ரமணிமனோவிநோதம்

**ரங்கநாதபாதுகாக்க்யபத்ரிகாப்ரகாசிதம்**
**வீரராகவாபிதாநஸூரிய வாங்மயம்,**
**தேசிகோபதேசநாம சீர்ஷகேண! பூஷிதம்**
**லேகமத்ய ஸம்ம்ருசாமி ஸங்மந : ப்ரஸத்தயே!**

**காஞ்சீவாதிபயங்கரவம்சீயாண்ணங்கரார்ய தாஸேந**
**ஸ்ரீ வீரராகவார்ய: க்ரியதே விஜ்ஞாதவிபல தத்வார்த்த :**

ஸ்ரீரங்கநாத பாதுகர்பத்ரிகையில் (காளயுக்தி புரட்டாசியிதழில்) ஸ்ரீமது பயவே வித்வான் ஸுஹ்ருமணி மதுராந்தகம் வீரராகவாசார்யஸ்வாமியெழுதிவெளியிடுவித்துள்ள தேசிகோபதேசமென்னுங்கட்டுரையினுல் மஹான்களின் திருவுள்ளம் கலக்கமுருதபடிக்கு இது விஜ்ஞாபிக்கவாகிறது. இதை வாதவிவாத ஸ்பர்த்தையாகக் கொள்ளாமல் மஹான்கள் வரியடைவே கடாக்ஷித்தருளித் திருவுள்ளமுகந்தருள்வர்களென்று நம்புகிறேனடியேன். மதுராந்தகஸ்வாமியின் கட்டுரையில் புதிய விஷயம் ஸ்வல்பமிருந்தாலிருக்கலாம்; பெரும்பாலும் பிஷ்டபேஷணம், சர்வித சர்வணமே. ஏற்கனவே அடியேன் பலகால்விடையிறுத்திருந்தும் அதைக் காணுதவர் போலவே திருப்பித் திருப்பி அதையே எழுதிப்போருவது இந்த ஸ்வாமியின் இயல்பாகவுள்ளது. இவர் சர்ச்சிக்கும் விஷயங்களை ஊக்கமுடன் காண்பவர்கள் சிலரேனும் இருப்பர்களோ வென்பது ஸந்தேஹாஸ்பதமே. அடியேனது இக்கட்டுரையை அந்த ஸ்வாமியொருவர் மட்டும் கடாக்ஷித்தருளினுலும் போதும். முக்கியமாக ஸ்ரீமதாண்டவன் திருக்கண்சாத்தி யருளவேணும். [முந்துறமுன்னம் ஒரு சிறு விண்ணப்பம்.] மஹாஸந்நிதானத்திலிருந்து வெளிவரும் பத்திரிகையில் விஷயஸந்நிவேசமெவ்வாறிருந்தாலும் அக்ஷரதோஷமாவது இல்லாமலிருந்ததால் அது ஒரு குணமாகும். இவருடைய கட்டுரையில் சொற்பிழை யில்லாத வரி தேடிப்பிடிக்க வேண்டியதேயாகும். அத்தகைய பிழைகளை நாம் விவரித்தால் "அச்சுப்பிழைகளை யெடுத்துக் கொண்டு அட்டஹாஸம் பண்ணுவதே இவனுக்குத் தொழில்" என்று ஸாதித்தருள்வர் நம்ஸுஹ்ருந்மணி.

ஆகவே எண்ணிறந்த அப்பிழைகளைப் பரமபோக்கியமாகவே கொண்டு விஷயவிசாரத்திற் செல்வோம். இவர் தாம் உதாஹரிக்கும் ப்ரமாண சரீரங்களைத் தமக்கே அஸாதாரணமான மருட்சியாலே சின்னபின்னமாக்கியிருப்பவற்றையும் விட்டுத் தொலைப்போம்.

ஸ்ரீமத்பரமஹம்ஸ. தேரழுந்தூராண்டவன் காஞ்சியில் எழுந்தருளியிருந்த காலத்து அரசாணிபாலையிலிருந்து ஒரு ஸ்வாமி வந்து ஏதோ விஷயம் சொல்லத் தொடங்கி அபசப்தமயமாகத் பொழிந்து கொண்டிருந்தார்; அருகேயிருந்தவர்களெல்லாரும் விலவறச் சிரிக்கையில் "அபசப்தபயம் நாஸ்தி அப்பளாசார்ய ஸந்நிதௌ" என்று ஆண்டவன் ஸாதித்தருளக் கேட்டேன். விவேகிகளான பத்ரிகாஸம்பாதகர்கள் தாம் இந்த அபத்த அஸம்பத்த புஞ்ஜங்களை எப்படித்தான் அச்சிட்டார்களோ அறியோம்.

அவதரணிகை இவ்வளவே போதும். விஷயங்களை ஒவ்வொன்ருகக் கேண்மின். இந்த வீண் போதுபோக்கு—தண்டப் போதுபோக்கு நமக்கு அவசியந்தானு? என்று இடையிடையில் வெறுப்புமுண்டாகிறது இக் கட்டுரையெழுதுவதில். ஆனுலும் தொடங்கியாயிற்று: கூடுமான ஸம்க்ஷேபத்தில் முடிக்கிறேன். திருமங்கையாழ்வார் அருளிச்செய்த திவ்யப் பிரபந்தங்களின் பௌர்வாபர்யத்தில் ஒரு விவாதம். திருமடல்களின் எண்ணிக்கையில் ஒரு விவாதம். ஸப்ததிரத்நமாலிகை, *சீரொன்று தூப்புல் செய்யுள்—இவற்றில் ஒரு விவாதம். இங்ஙனே மற்றுஞ்சிலவுள. முந்துற முன்னம் பௌர்வாபர்ய விமர்சத்தை முடிப்போம்.

பகவத் பாஷ்யகாரர் அருளிச்செய்த ஒன்பது க்ரந்தங்களின் பௌர்வாபர்யத்தை முன்னம் விமர்சிப்போம். ஸ்ரீதேசிகனருளிச்செய்த குருபரம்பராஸார மென்னும் ரஹஸ்யத்தில் எம்பெருமானாருளிச்செய்த க்ரந்தங்களை அடைவே அருளிச்செய்து வருகையில் "இவரருளிச் செய்த பிரபந்தங்கள்— ஸ்ரீபாஷ்யம், தீபம், ஸாரம், , வேதார்த்தஸங்க்ரஹம், ஸ்ரீகீதாபாஷ்யம், சிறிய கத்யம், பெரிய கத்யம், ஸ்ரீவைகுண்ட கத்யம், நித்யம்—ஆக ஒன்பது" என்றுள்ளது. இத்தால் ஸ்ரீபாஷ்ய தீபஸாரங்கள் அருளிச் செய்த பிறகே வேதார்த்த ஸங்க்ரஹமருளிச் செய்யப்பட்டதென்பதும், சரணாகதி கத்யத்திற்கு முன்பே ஸ்ரீரங்ககத்ய மருளிச்செய்யப்பட்டதென்பதும் ஸ்பஷ்டமாகத் தேறுகிறது. கத்யவிஷயமிருக்கட்டும். வைகுண்ட கத்யத்திற்கும் பிறகே சரணாகதி கத்யம்அருளிச் செய்ததாகவுமிருக்கட்டும். வேதார்த்த ஸங்க்ரஹம் ஸ்ரீபாஷ்ய தீபஸாரங்களுக்குப் பிற்பட்டதென்று தேசிகன் தெரிவித்தருள்வதைச் சிறிது ஆராய்வோம்.

ஸ்ரீபாஷ்யத்தில் ஜிஜ்ஞாஸாதிகரணத்தில்- "யதுக்தம் வேதாந்த வாக்யாநி நிர்விசேஷ..... '; இத்யாதியான வாக்யச்ரேணியில்—"ப்ரபஞ்சிதச்ச அயமர்த்தோ **வேதார்த்த ஸங்க்ரஹே;** அத்ராபி ஆரம்பணாதிகரணே நிபுணதர முபபாதயிஷ்யதே" என்றுள்ளது. *த்ரிம்சத்வாரம் ச்ராவிதசாரீரக பாஷ்ய:* என்றும், *ப்ரவசநவிதாவஷ்டாவிம்சே ஜயத்வஜ பட்டிகா* என்றும் பேசிவைத்த தேசிகனுக்கு இந்தவிடம் விஸ்ம்ருதமாயிற்றா? அதீதமும் அத்யாபிதமும் ஆசவில்லையா? அல்லது, (வேதார்த்தஸங்க்ரஹே) ப்ரபஞ்சித: என்பதற்கு பூதகாலப்பொருள் விவக்ஷிதமன்று; *ஆசம்ஸாயயம் பூதவச்ச* என்கிற வியாகரண ஸூத்ரத்தின்படி பவிஷ்யதர்த்தம் கொள்ள வேணுமென்கிறீரா? பகவத்கீதையில் பத்தாமத்யாயத்தில் பத்தாவது சுலோகம்—* தேஷாம் ஸததயுக்தாநாம்*என்பது. இங்கு ஸததயோகம் ப்ராப்தவதாம் என்று பொருள் கொள்ளாதே "மயி ஸததயோகம் ஆசம்ஸமாநா நாம்" என்று பணித்தருளினர் பாஷ்யகாரர்; தாத்பர்ய சந்த்ரிகையில் தேசிகனும் 'அப்படித்தான் பொருள் பணிக்க வேணுமென்று ஔசித்யம் காட்டியருளுகிறார் அதை மூலமாகக் கொள்ளலாமே நம்மவர். அல்லது வேறு வழி ஏதேனும் பற்றுகிறாரா? இது முக்கியமாகத் தெரிய வேண்டும்.

இவர் வேதமோதினவர்களிடத்திலே சர்ச்சை செய்ய வேண்டிய விஷயமொன்றை ப்ரக்ருதோபயோகியாக விஜ்ஞாபிக்கிறேன்; தைத்திரீயயஜுஸ்ஸம்ஹிதை மூன்றாவது காண்டம் முதல் ப்ரச்நத்தில *மநு: புத்ரேப்யோ தாயம் வ்யபஜத்*என்று தொடங்கும் அநுவாகத்தில் ஒரு கதை ஓதப்பட்டுள்ளது; அதாவது (வேதபாஷ்யாநுஸாரேண எழுதப்படுகிறது;)

மநுவானவர் ஒருகால் தம் புதல்வர்கட்குப் பங்கு பிரித்துக் கொடுத்தார். அப்போது, நாபாநேதிஷ்டனென்கிற ஒரு புதல்வன் மட்டும் ப்ரஹ்மவித்யை யதிகரிப்பதற்கு வெளியூர் சென்றிருந்தபடியால் அவனுக்குப் பங்கு ஒன்றும் வைத்திலர். இஃதறிந்த நாபாநேதிஷ்டன் ஓடிவந்து' அப்பா! எனக்கு ஏன் நீர் பங்கு வைக்கவில்லை? என்று பிணங்க, அதற்கு அவர் சொன்னதாவது-'பிள்ளாய்! உனக்கு நான் பங்கு வைக்காமல் போகவில்லை; அதோபார், அங்கிரஸ்ஸுக்களென்பவர்கள் வேள்வி செய்கின்றனர்; அவர்கள் முக்கியமான மந்திரத்தை மறந்து போவர்கள்; அதை இதோ உனக்குக் கற்பிக்கிறேன். நீ அங்குச் சென்று ஸமயத்தில் இதை அவர்களுக்கு நினைவூட்டிச்சொல்லு. அவர்கள் மிக மகிழ்ந்து யஜ்ஞசிஷ்ட பசுக்களையெல்லாம் உனக்குக் கொடுத்திடுவர்கள்; அவற்றால் நீ மஹாதனிகனாய் விடுவாய்" என்று சொல்லி அவனுக்கு அந்த ப்ராஹ்மணத்தை உபதேசித்தார். அவனும் அப்படியே அங்குச் சென்று ஸமயத்தில் அந்த மந்திரத்தைச் சொல்ல, அவர்களினுடைய அபீஷ்டம் நிறைவேறி யஜ்ஞசிஷ்ட பசுக்களையெல்லாம் இவனுக்கு [நாபாநேதிஷ்டனுக்கு]க் கொடுத்தார்கள். இவன் அவற்றை யெல்லாம் எடுத்துக் கொண்டு புறப்பட, ருத்ரன் அங்கேற வந்து "பயலே! யஜ்ஞசிஷ்ட பசுக்களுக்கு நான்தான் ஸ்வாமியாகையாலே இவர்களுக்கு இவற்றைக் கொடுக்கவும் அதிகாரமில்லை; நீ அவற்றைக் கொண்டு போகவும் தகாது" என்று தகைந்தான்..... மேலே செல்லுகிற கதையிருக்கட்டும். இவ்வளவால் ருத்ரனே பசுபதியென்று தேறிற்று. இது மூன்றாவது காண்டம் முதல் ப்ரச்நத்திலுள்ள கதை. ருத்ரனுக்குப் பசுபதித்வம் எப்போது வந்தது? என்று விமர்சிக்கவேணும். மேலே ஆறாவது காண்டம் இரண்டாம் ப்ரச்நத்தில்-*

*தேஷா மஸுராணும் திஸ்ர:புரஆஸந்* என்று தொடங்கு மறுவாகத்தில் த்ரிபுரஸம்ஹாரகதை ஓதப்பட்டுள்ளது. *குழல் நிறவண்ண! நின்கூறு கொண்ட தழல்நிறவண்ணன் நண்ணூர் நகரம் விழ, நனிமலை சிலைவளைவு செய்து அங்கழல்நிற அம்பது வானவனே!* என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்தின்படி ஸ்ரீமஹாவிஷ்ணு அழல்நிற அம்பதுவான பிறகு எய்ய வேண்டிய காலத்தில் "ருத்ரோ வை க்ரூர:, ஸோஸ்யது" என்று தேவர்கள் சொல்ல; அப்போது "ஸோப்ரவீத் வரம் வ்ருணை: அஹமேவ பசூநாம் அதிபதிரஸாநி" என்று ருத்தரன் தான் பசுபதியாகப்பெற வேணுமென்று வரம் வேண்டிப் பெற்றதாகச் சொல்லப்பட்டுள்ளது. இது ஆறுவது காண்டத்துக் கதையென்பது நினைவிருக்க வேண்டும். ஆக இக்கதை மூன்றுவது காண்டத்திற்கு முந்தியிருக்க வேண்டும். ஏனென்றால், தான் பசுபதியாவதற்கு முன்னே "ந வை-தஸ்ய த ஈசதே யத் யஜ்ஞுவாஸ்தௌ ஹீயதே மம வை தத்" என்று ருத்ரன் சொல்ல உரிமையில்லையன்றோ? குவலயாநந்தத்தில்* வ்யாஸ்த்தம் நைகதயா ஸ்திதம் ச்ருதி கணம்* என்று தீக்ஷிதர் உதாஹரித்த ச்லோகத்தின்படி ஒரே கூளமாய்க் கிடந்த வேதக்குவியலைப் பாகுபாடு செய்த வியாஸமுனிவர் இப்படி முன்னது பின்னதாகப் படித்தார் என்று சொல்லியாக வேண்டும்.

மற்றொன்றுங் கேளீர்; *அக்நே மஹாக்ம் அஸிப்ராஹ்மணபாரத* என்கிற ருக்கு மூன்று அஷ்டகத்தில் ஓதப்பட்டு வருகிறது, இதற்கு (இத்யாஹ) ஓதுகிற ப்ராஹ்மணம் எங்குள்ளதென்று பார்க்க வேணும். ஸம்ஹிதை இரண்டாவது காண்டம் ஐந்தாவது ப்ரச்நத்தில்* அக்நே மஹாக்ம் அஸீத்யாஹ மஹாந்ஹ்யேஷயதக்நிர் ப்ராஹ்மணேத்யாஹ ப்ராஹ்மணோ ஹ்யேஷ பாரதேத்யாஹ * இத்யாதியாக மிகமிக முன்னமே ஓதப்பட்டுள்ளது. இது அடைவுதானோ? பிறழ்வா? என்று விசாரம் செய்ய இந்த ப்ராஹ்மணர்வல்லவராகில் செய்யட்டுமே. *காகஸ்ய கதி வா தந்தா:? மேஷஸ்யாண்டம் கியத்பலம்?* என்றாற் போன்ற சுஷ்கவிசாரங்களைச் செய்வதற்கேயா இவர்கற்றது?. "ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளையும் இப்படித்தான்" என்று இவர் எழுதுவது மருளா? விப்ரலம்பமா? என்பதை ஆராய்வார் ஆர்கொல்!

**திருமடல்களில் அருவருக்கத்தக்க இருள் துயக்குமயக்கு :** நண்பர் எழுதுகிறார்—மடல் தமிழர் மரியாதையின்படி— தமிழிலக்கணப்படி— தமிழர் ஸங்கேதப்படி அமையவில்லையாம்; ஆகவே தமிழிலக்கணப்படி மடலை ஒரே பாட்டாகக் கொள்ள வேண்டிய அவசியமில்லையபம். *ப்ருஷ்டதாடநாத் தந்தபங்க:* இங்ஙனம் தலைகாலில்லாமல் எழுதுமிவரை நோக்கியெழுதவெள்காநின்றோம். ஸ்ரீமந் நாதமுனிகள் தொடங்கி மணவாள மாமுனிகளீறாகவுள்ள ஆசார்யர்களில் ஒருவரும் திருமடலைப் பல பாட்டுகளாகப் பிரிக்கவில்லை. தேசிகன் பிரித்திருக்கிறாரென்கிற மருளைத்தொலைத்து முப்பது வருடமாயிற்று. மீண்டும்* சுக்லாம் பரதரம் விஷ்ணுமாகவேணுமோ: *காரார்வரைக் கொங்கை என்று தொடங்கி* வாரார் பூம் பெண்ணைமடல்* என்னுமளவும் ரகரவெதுகைமாறாமலும்; *மன்னியபல் பொறிசேர்* என்று தொடங்கி* மன்னிய பூம்பெண்ணைமடல்* என்னுமளவும் னகரவெதுகைமாறாலும் அமைந்த திருமடல்களை ஒரேபாட்டென்னுதே பல பாட்டுக்களென்னத் துணியார் விவேகிகள். இதுபற்றிப் பாரதமும் இராமாயணமுமாக எழுதியாயிற்று. கலிவெண்பாவானவிது பல பாட்டுகளாகக் கொள்ளப்பட ஔசித்யலேசமுமில்லை. *நாலாயிரம்* என்கிற வ்யவஹாரம் நாலாயிரம் பாட்டுக்களைக் கொண்ட தென்பதுபற்றி என்கிறமருள் நண்பர்க்கு மட்டுமேயன்று, பலருக்குமுண்டு; உண்மையாதெனில்; ஸ்ரீமந்நாத முனிகள் முதலாயிரமென்றும் இரண்டாவதாயிரமென்றும் மூன்றாவதாயிரமென்றும் நான்காவதாயிரமென்றும் பாகுபாடு செய்தது பற்றியேயாம். திருவாய்மொழியில் பதிகந்தோறும் ஆயிரமாயிரமென்னு நிற்கச் செய்தேயும் ஏற்றக் குறைவின்றி ஆயிரம் பாசுரம் தேறாதாப்போகுல நாலாயிரம் பாசுரங்கள் சரிசமமாகத் தேறாவிடினும் நாலாயிரம் பாசுரங்களென்னவும் குறையில்லை. *ஊமையரோடு செவிடர் வார்த்தை போதும் போதும். திருப்பல்லாண்டைப் பெரியாழ்வார் திருமொழியோடு ஏகப்ரபந்தமாகக் கொள்ளவேணுமென்று ஆக்ரஹிப்பது வ்ருதாச்ரம: திருப்பாவையும் நாச்சியார் திருமொழியும் ஏகப்ரபந்தமேயென்றும் ஆக்ரஹிக்கலாமே.

# ஸப்ததிரத்நமாலிகையைப்பற்றி

அஸ்மத் குலகூடஸ்தர் தேசிகன் விஷயமாக இப்பெயர் பூண்டதொரு ஸ்தோத்ரம் பணித்த தாகச் சொல்லி ஒரு நூல் அச்சிட்டுள்ளார்கள். இந்த ஸ்தோத்ரத்தை இயற்றுவதற்கு ப்ரதிவாதி பயங்கராசார்யருக்கு யோக்யதையில்லையென்றுவது, இந்த ஸ்துதியைக் கொள்வதற்கு ஸ்வாமி தேசிகனுக்கு அர்ஹதையில்லையென்றுவது நெஞ்சால் நினைக்கவும் முடியாது; எழுபது சுலோகங்களல்ல; எழுநூறு, ஏழாயிரமுஞ்சொல்லித்துதித்திருந்தாலும் ஏற்கும் பெரும்புகழ் படைத்தவர் ஸ்வாமி தேசிகன். அண்ணவைபவத்தில் அவருடைய க்ருதிகளை நிர்தேசிக்குமளவில் "ப்ராசார்ய ஸப்ததிரத்ந மாலை" என்றொருஸ்துதி பணித்ததாக எழுதப்பட்டுமிருக்கிறது. அது அச்சிடப்பட்டிருக்கவில்லை. மற்றும் பல நூல்களைப் போல அதுவும் லுப்தமெனத் தெரியவருகிறது. ஏன் அப்படி சொல்லவேணும்? இப்போதிருக்கிற ஸ்துதியையே அவருடைய க்ருதியாகக் கொள்ளப்படுவதற்கு என்ன குறை?. என்று கேட்கலாம். குறிக்கொண்டிது கேண்மின் ;

ஸ்தோதவ்யருடைய பெருமைகளையும் பெரும் புகழ்களையும் உலகமுகக்கப் பேசுவது ஸ்தோத்ர மாகும்; ஸ்துத்யரிடத்தில் உலகுக்கு ஜுகுப்ஸை பிறக்கும்படியாகப் பேசுவது ஸ்தோத்ரமாகுமா? "ஆசாரியர் உலகமெலாம் போற்றவெழுந்தருளிருந்தார்; அவருடைய திருவடிகளில் வணங்காதவர் களும், அவருடைய திருக்குணங்களில் ஈடுபடாதவர்களும் ஒருவருமிருந்ததில்லை" என்றிப்புடைகளிலே பேசுவது ஸ்தோத்ரமாகுமே யொழிய, "உலகமெல்லாம் பழிக்கும்படியாகவும் பரிபவப்படுத்தும் படியாகவுமிருந்தார்" என்று பேசி வைப்பது பழிப்பாகுமத்தனையல்லது ஸ்துதியாகாதென்பதை பாலிசனுமறிவன். நவீனர் சொல்லுகிற ஸப்ததிஸ்துதியிலுள்ள ஒரு சுலோகத்தை மட்டும் கேண்மின்;

'ஹந்த! ஹந்த! ராமக்ருஷ்ண தூஷணபிதாயிநாம்
கிம் நு சித்ரமத்ர சைத்ய ராவணநுஸாரிணாம்" என்பது.

எம்பெருமான் விஷயத்தில்*கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளே வைதுகொண்டிருந்த சிசுபாலாதிகளைப்போல காது கொண்டு கேட்கமுடியாத தூஷணங்களையே தேசிகன் திறத்தில் அக் காலத்தவர்கள் பொழிந்து கொண்டிருந்தார்கள் என்று கவியியற்றுவதா ஸ்தோத்ரம்? இப்படி எந்த ஆசாரியர் விஷயத்திலாவது ஸ்துதி நூல் தோன்றியுள்ளதா? இந்த அஸம்பாவிதத்தை ஆராய்ந்தறிய வல்ல விவேகிகள் கூடவா நண்பருடைய வகுப்பில் இல்லை?

யதிராஜஸப்ததியில் — "ச்ருதிச்ரேணீ சூடாபதபஹுமதே லக்ஷ்மணமதே ஸ்வபக்ஷஸ்தாந் தோஷாந் விததமதி: ஆரோபயதி ய:, ஸ்வஹஸ்தேநோத்க்ஷிப்தைஸ் ஸ கலு நிஜகாத்ரேஷு பஹுலம் கலத்பிர் ஜம்பாலைர்ககநதல மாலிம்பதி ஜட:" என்று ஸ்வாமி தேசிகன் பணித்தருளின ச்லோகம் எவ்வளவு கம்பீரமாகவுள்ளது! ஸ்தோத்ரமென்றால் இப்படியன்றோ இருக்கவேணும். 'திண்ணையின்மீது வீற்றிருந்து க்ரந்தாவலோகனஞ் செய்து கொண்டிருந்த தேசிகனைக் காலைப் பிடித்திழுத்துத் தெருவிலே தள்ளினார்கள்; தலையிலே படும்படி பாதரக்ஷைகளைக் கட்டித் தொங்க விட்டு வைத்தார்கள்; ச்ராத்தத்திற்கு நிமந்த்ரணத்திற்கு ஒப்புக்கொண்டிருந்து வஞ்சித்தார்கள்— என்றிப்படியெல்லாம் அபத்த புராணங்களையும் அம்மையார் சரிதைகளையும் எழுதி வைப்பதா தோத்திரம்! இப்படி தீக்ஷ்ணமான அபசாரங்கள் படும்படி தேசிகன் யாருக்கு என்ன தீங்கு விளைத்தார்? "தொண்டை மண்டல வேதியர் வாழவே தூயதென்மறை வல்லவர் வாழவே" என்று தென்கலை

யாரை அற்புதமாக வாழ்த்தியருளின தேசிகனை உண்மையில் பழிப்பவர்கள்—இற்றைக்கும் நாளைக்கும்
திருவாய்மொழியென்று கூடச் சொல்லவறியாதே திருவாமொழியென்றே சொல்லுபவர்களாகத்
தானிருக்கவேண்டும். சபதம் பண்ணிச் சொல்லுவேன்—பரம்பரயா ஸ்ரீவைஷ்ணவர்களாயிருப்பவர்களில்
ஒருவர்கூட தேசிகனைப் பழிக்க நெஞ்சிலும் நினையார். (பாதுகா ஸஹஸ்ரே) * த்ரமிடோபநிஷந்நிவேச
சூந்யாநபி லக்ஷ்மீரமணுய ரோசயிஷ்யந், த்ருவமாவிசதிஸ்ம பாதுகாத்மா * என்று பணித்தருளிய
படி த்ரமிடோப நிஷ நிவேச சூந்யர்களாய், ஸமீப காலத்தில் கோவில் சண்டைகளுக்காகவே
இவரைப் போலத் தப்புந்தவறுமாகக் கற்று ''வழ வெழுந் தவழ மாழ மதனமா'னுகுரு நந்தன்னுள்''
என்று சொல்லுவதோடு நில்லாமல் எழுதியச்சிட்டும் போகிருர்களே, அவர்கள்தாம் அக்காலத்தில்
தேசிக தூஷகர்களாயிருந்தார்களென்பதைக் குடப்பாம்பில் கையிட்டுரைப்பேன்.

கீர்த்தி மூர்த்தியாய் மஹாவிவேகியாயெழுந்தருளியிருந்த (ஹைகோர்ட் ஜட்ஜ்) ஸ்ரீமத் வி. வி.
ஸ்ரீநிவாஸய்யங்காரவர்கள் ''வடகலையார்கள் அநாதி காலமாகவே திவ்ய ப்ரபந்தவைரிகளாயிருந்து
வருவது வருந்தத் தக்கது'' என்றெழுதிச் சுதேசமித்திரனில் வெளியிட்டிருப்பது பல கால் மறு பதிப்
பேறியுள்ளது. மிக்க வயிற்றெரிச்சலோடன்றே வி. வி. ஸ்ரீ வரைந்திருப்பது. அவருடைய கருத்துக்
கிணங்க ''தூயதென்மறை வல்லவர் வாழவே'' என்கிற தேசிக திவ்ய ஸூக்திக்குப் பொருள் பணிக்க
வேணுமல்லவா! தேசிகன் காலத்தில் வாழ்ந்த தூயதென்மறைவல்லவர்கள் எங்கள் வகுப்பினரே
யென்று மார்பு தட்டிச் சொல்ல மதுராந்தக நண்பர் அதிகாரியா' என்று மடி பிடித்துக் கேட்கிறேன்.

ஸப்ததி ரத்ன மாலிகையின் மருமம் கேண்மின். இப்போது தேசிகன் தேசிகன், நிகமாந்த
தேசிகன் தூப்புல் தேசிகன்' என்று உருப்போடும் வகுப்பினர் என்றைக்கு தேசிக ஸம்பந்தத்தை
ஆவாஹனம் செய்து கொண்டார்களென்பதை நிர்ணயிப்பதில் இறையும் அருமையில்லை. திருவல்லிக்
கேணி ஸ்ரீபெரும்பூதூர் திருவிந்தளூர் திருவரங்கம்பெரியகோயில் கச்சி முதலான திவ்ய தேசங்களில்
ஸன்னிதிக்குள்ளே தேசிகன் திருக்கோலம் எழுந்தருளியிருந்து உத்ஸவாதிகள் குறையற நடைபெறச்
செய்தேயும் பாஹ்ய பூமிகளிலே ஸ்வாமிக்குக் கோவில் கட்டிக் குணலமாடத் தொடங்கின காலமொன்
றுண்டே, அந்தக் காலத்தையே இவர்கள் தேசிக ஸம்பந்தத்தை ஆவாஹநம் செய்து கொள்ளத்
தொடங்கின காலமாக அறுதியிடத் தட்டில்லை. (அதாவது இருநூற்றுச் சொச்சம் வருஷங்கள் ) அக்
காலத்தில் இருவகுப்பிலும் பாமரர்களாயுள்ளவர்கள் பாஸ்பரம் ஆசார்ய நிந்தைகளை அளவு கடந்து
செய்து புத்தகங்கள் அச்சிட நேர்ந்தது என்பது செப்பேடும் சிலாசாஸனமும் பெற்றது. அதே ஸமயத்
தில்தான் இந்த ''ஹந்த ஹந்த! ராமக்ருஷ்ண தூஷணுபிதாயி நாம கிம் நு சித்ரமத்ரசைத்ய
ராவணுநுஸாரிணுயித்யாதிகள் அவதரித்தன.

(வெண்பா.) மற்றும் பலவும்மதுராந்தகரே! நும்,
குற்றங் குறைகள்தமைக் குன்றேபோல், எற்றைக்கும்
கற்றோர் மனமுவப்பக் காட்டிடநாம் கைதேர்ந்து,
சற்றும் சலியோம் சாத்து.

ஸ்ரீகாஞ்சீ, பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர் எழுதிய
மதுராந்தகமித்ரமணி மநோவிநோதம் முற்றிற்று.

*

## ஸமீப காலத்தில் இவ்வூரில் நடந்த ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவங்கள்.

சின்ன காஞ்சீபுரியில் கீழண்டை மாடவீதி, வடவண்டை மாடவீதி, ஸன்னிதி வீதி செட்டித் தெரு, திருப்பக்குடல் வீதி ஆகிய ஐந்து வீதிகளில் ஸ்வாமிகள் ஐவர்க்கு அறுபதாண்டு நிறைவு விழா சிறப்பாக நடைபெற்றிருப்பதைப்பற்றித் தெரிவிக்கலாகிறது.

1. கீழண்டை மாட வீதியில் ஸ்ரீமான் உ. வே. (திருக்கோட்டியூர் சாத்துப்படி வரதாசாரியர்—தேவப்பெருமாள் ஸன்னிதியில் சாத்துப்படி மிராசுதாரரும், அத்யாபக மிராசுதாரருமான இவர்க்கு ஆவணிமீ பரணீ நக்ஷத்ரத்தில் ஷஷ்டியப்த பூர்த்தியை முன்னிட்டு ஆடிமீ 30-ஆம்தேதி (15-8-78ல்) திவ்யப்ரபந்த சேவையும் வேத பாராயணமும் 10 நாள் பூர்த்தியாக நடைபெற்று, ஆவணிமீ 8உ (24-8-78 ல்) அனேக திவ்யதேச ஸன்மானங்களுடன் உபயவேத சாத்துமுறையும் திருக்கலியாணமும் நிறைவேறிற்று.

2. வடவண்டை மாட வீதியில், பாண்டவதூதப்பெருமாள் ஸன்னிதி தர்மகர்த்தாவும், ஷெ ஸன்னிதி கைங்கரிய பரருமான ஸ்ரீ உ. வே. திருமலைவிஞ்சிமூர் ஸ்ரீ நிவாஸாசாரியர் குமாரருமான (ஜோஸ்யர்) ரங்கஸ்வாமி அய்யங்காருக்கு ஆவணிமீ 5உ (21-8-78) ஷஷ்டியப்த பூர்த்திசாந்தி சிறப்பாக நடைபெற்றது.

3. செட்டித் தெருவில் ஸ்ரீமான் உ. வே. கொமாண்டூர் இளையவில்லி ஸுந்தராசாரியர்க்கு மூன்று நாள் திவ்யப்ரபந்த ஸேவையும் வேதபாராயணமும் நடைபெற்று ஆடிமீ 28உ (13—8—78ல்) சாத்து முறையும் திருக்கல்யாணமும் நடைபெற்றது. (ஒரு விசேஷம்) இந்த திருக்கல்யாணத்தின் ஞாபகார்த்தமாக, ஸ்ரீதேவராஜஸ்வாமி தேவஸ்தான மணவாள மாமுனிகள் ஸன்னிதி கைங்கர்யார்த்தமாக வடவண்டை மாட வீதியில் அமாநவ வரதாசாரியர் மனைவி பெருந்தேவியம்மாள் எழுதி வைத்திருந்த 4-B, நெம்பர் கிருஹத்தை மராமத்து செய்ய நூறு ரூபாய் நன்கொடை அங்கீகரிக்கப்பட்டது.

4. திருப்பக்குடல் தெருவில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமான் உ. வே. ஷஷ்டி வரதாசாரியர்க்கு மூன்று நாள் வேத திவ்யப்ரபந்த பாராயணங்கள் நடந்து ஆவணிமீ 5உ (21—8—'78) திங்கட்கிழமையன்று மாங்கல்யதாரணம் நடைபெற்றது.

5. ஸன்னிதி வீதியில் ஸ்ரீமான் உ. வே. கோடி கன்னிகாதானம். ஸந்தான கோபால தாதாசாரியர்க்கு மூன்று நாள் வேதபாராயணத்துடன் புரட்டாசி பரணீ நக்ஷத்திரத்தில் வேதசாந்தியும் திருக்கல்யாணமும் நடைபெற்றது. அனைவரும் நீடுழி வாழ்க.

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2, பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண ச்ரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்.
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்.
12. உபந்யாஸக ஸௌபாக்ய நூல்கள்.
13. வடமொழி நூல் திரள்கள்.
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்.
15. தெலுங்கு பாஷையில ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்

**P. B. ANNANGARACHARYA.**
*Editor,* GRANTHAMALA, Kancheepuram-631503

என்ற விலாசத்திற்கு அனுப்புக.

If un-delivered please return to:

P. B. ANNANGARACHARYA,
Kanchipuram, Pin Code-631503.



To
Sriman/Srimathi

Edited and Published by P. B. Annangaracharya Swami
and Printed by E. Devarajan at Sri Kamakshi Press.
No. 44 c, Thirukatchinambi Street, Kancheepuram-631503.